## இலவசம்

பளபளக்கும் ஸ்டெய்ன்லெஸ்
ஸ்டீல் கிண்ணம்

புதிய

# பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
# திட உணவு

இரண்டு டின்கள் வாங்கும்போது




புதிய ஃபாரெக்ஸ் அதிக சுவையானது
புதிய ஃபாரெக்ஸ் அதிக முழுமையானது

நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.

இவ்வாய்ப்பு தேர்ந்தெடுத்த சில ஊர்களில் மட்டும்
விசேஷ டின்களின் மீது ஸ்டாக் உள்ளவரை வழங்கப்படும்.

உடல் நலத்தின் உறைவிடம் – கிளாக்ஸோ

CLARION B/GX/5/203 TML

சந்திப்பு

# ரமேஷ் கிருஷ்ணனின் ப்ரியா!



டென்னிஸ் மட்டைகளைப் பிடித்துப் பழகிய ரமேஷ் கிருஷ்ணனின் கரங்கள் வருகிற மே மாதத்தில் அழகான வளைக்கரங்களைப் பற்றவிருக்கிறது. அந்த வளைக்கரங்களுக்குச் சொந்த மானவர் ப்ரியா. சேஷசாயி இண்டஸ்ட்ரீஸ் அதிபர் திரு சேஷசாயி அவர்களது மகள்.

அடையாறு கேட் ரோட் அருகில் இருக்கும் ப்ரியாவின் வீட்டில் அவரைச் சந்தித்த போது — ரொம்பவும் கேஷுவலாகப் பேசினார். "என் திருமண நிச்சயதார்த்தம் பற்றி, என் நெருங்கிய தோழிகளிடம் நான் தெரிவித்ததும் விஷயம் காலேஜ் முழுதும் பரவி ஒரே வாழ்த்து மழை தான்!" ஸ்டெல்லாவில் பி.ஏ. ஆங்கில இலக்கியம் இறுதி ஆண்டு படிக்கிறார் ப்ரியா.

"என் தாய் தந்தையரும் 'அவரு'டைய தாய் தந்தையரும் நீண்ட நாட்களாகக் குடும்ப நண்பர்கள். ஆனாலும் இது லவ் மேரியேஜ் இல்லவே இல்லே! முழுக்க, முழுக்க பெரியோர்கள் ஏற்பாடு செய்த கல்யாணம் தான். என் படிப்பைத் தொடரலாம் என்று இருக்கிறேன். எம். ஏ. (ஜர்னலிசம்) படிக்க வேண்டும் என்பது என் நோக்கம்."

ப்ரியாவுக்கு ஆங்கில நாவல்கள் என்றால் மிகவும் பிடிக்கும். அதுவும் சமர்—செட் மாம் நூல் என்றால் விரும்பிப் படிப்பாராம்.

கல்லூரியில் கருத்தரங்குகளிலும், 'க்விஸ்' போட்டிகளிலும் பங்கு கொண்டுள்ளார் ப்ரியா. கல்லூரி மேகஸினில் ஆங்கிலக் கவிதைகள், விமர்சனங்கள் எழுதிய அனுபவமும் உண்டாம். பாட்மின்டன் விளையாடுவாராம். கிரிக்கெட், டென்னிஸ் என்றால் ஆர்வம் உண்டாம்.

இதுவரை வெளி நாடுகளுக்குச் சென்றதில்லையாம். (கல்யாணத்திற்கு பிறகு வருடத்தில் பாதி நாட்கள் ரமேஷுடன வெளி நாட்டில் தானே இருக்தாக வேண்டும்!)

ப்ரியாவிற்கு புடவை தவிர சுடிதார், கம்மீஸ் அணிவதும் மிகவும் பிடிக்குமாம். 'பயணம் செய்யும் போது சுடிதார் அணிந்து கொள்வது ரொம்பவும் வசதியாக இருக்கும்" என்கிறார்.

சென்னையிலேயே பிறந்து வளர்ந்தாலும், தாத்தா பாட்டி இருக்கும் பாம்பே தான் ப்ரியாவுக்குப் பிடித்த இடம். "வருடத்திற்கொரு முறை அங்கு சென்று நீண்ட நாட்கள் தங்குவதை மிகவும் விரும்புகிறேன்."

சிகப்பு நிறம் பிடித்ததென்றாலும், ஒரேயடியாகச் சிவப்பு நிறத்தில் உடையணிவது பிடிக்காதாம்; சிகப்புடன் ஏதாவது ஒரு லைட் கலர் சேர்ந்த காம்பினேஷன் வேண்டுமாம்.

"எனக்கு அடிப்படையான சமையல் தெரியும். இதை வைத்துக் கொண்டு வெளி நாட்டிலும், இந்தியாவிலும் சமாளித்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை இருக்கிறது."

ப்ரியாவிடம் மகாராஜபுரம் சந்தானம் பாட்டு கேசட்டுகள் நிறைய இருக்கின்றன. லால்குடி வயலினும் பிடிக்குமாம்.

"பிரெஞ்சு மொழி கற்றுக் கொண்டது இனி மிகவும் உபயோகமாக இருக்கும்" என்கிறார் ப்ரியா.

ப்ரியா — ரமேஷ் கிருஷ்ணன் திருமணம் எளிமையாக ஆறுல் சம்பிரதாய முறையில் நடக்க இருக்கிறது. வசதியிருந்தும், ஆடம்பரமாகக் கல்யாணம் நடத்தி டாம்பீகத்தைக் காட்டிக் கொள்ள விரும்பாத இந்தக் குடும்பத்தினரின் முற்போக்கான எண்ணங்களை மாப்பிள்ளை வீட்டாரும் விரும்பி வரவேற்கிறார்களாம். சிம்பிளாக கல்யாணம் செய்ய வேண்டும் என்பதில் மிகவும் உறுதியாக இருப்பவர் ரமேஷ் கிருஷ்ணன் தானும்.

பேட்டி: **தில்லப்பா**

''டாக்டர்! உடல் பருமனைக் குறைக்க என்ன செய்ய வேண்டும்?'' — என்று தெரியாத்தனமாக ஒரு கேள்வியைக் கேட்டு விட்டு வகையாக மாட்டிக் கொண்டதன் விளைவு இந்தக் கட்டுரை.

''எதற்காக உடலைப் பருக்க விடுகிறீர்கள்? அப்புறம் குறைக்க வேண்டும் என்று கேட்கிறீர்கள்?'' என்றுபிடித்துக்கொண்டார் நமக்கு ஏற்கனவே நன்கு அறிமுகமான

**டாக்டர் என். எஸ். வியாஸ்**

**உடல் பருமனுவது (obesity) என்பது என்ன?**

சாதாரணமாக் சின்ன வயதில், இன்ன உயரம் இருந்தால் இவ்வளவு எடை இருக்க வேண்டும் என்று நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு ஒன்றிரண்டு கிலோ எடை கூடுவது பிரமாதமான விஷயமில்லை. பத்து சதவிதத்துக்கும் மேல் எடை கூடுகிற போதுதான் OBESITY என்று மருத்துவ இயலின் படி கூறுகிறார்கள்.

நாம் உட்கொள்கிற ஒவ்வொரு உணவுப் பொருளுக்கும் இவ்வளவு சக்தியைத் தரக்கூடியது என்று கணக்கு இருக்கிறது. இதற்குக் காலரி அளவு என்று பெயர். (CALORIES) ஒரு முட்டை 50 காலரி, ஒரு இட்லி 50 காலரி, ஒருதோசை 70 காலரி, ஒருகோப்பை கோதுமை உப்புமா 250 காலரி. ஒற்றை பிஸ்கட் 12.5 காலரி, ஐம்பது நிலக் கடலை 110 காலரி — என்று வரும். அதே போல் ஒவ்வொரு மனிதனுக்கும், அவனுடைய உடலுழைப்பைப் பொறுத்து எவ்வளவு சக்தி செலவாகும் என்றும் கணக்கு இருக்கிறது.

கையைக் காலை உதைத்துக் கொள்கிற ஆறு மாதக் குழந்தைக்கு 600 காலரி சக்தி தேவை. கடுமையாக உழைக்கிற ஒரு தொழிலாளிக்கு 3900 காலரி தேவை. சும்மா மேற்பார்வை வேலை மட்டும் பார்க்கிறவர்களுக்கு 2400 காலரி வேண்டும். பாலூட்டுகிற பெண்களுக்கு 3760 காலரி. கர்ப்பமுடைய பெண்ணுனல் 3300 காலரி போதும்.

உட்கொள்கிற உணவுப் பண்டங்களின் மூலம் கிடைக்கக் கூடிய காலரி அளவு 4000 ஆக இருந்து, உடம்பு செலவிடுகிற காலரி சக்தி 3600 ஆக இருந்தால் கூடுதல் சக்தி 400 எங்கே போகும்? அது அப்படியே கொழுப்புச் சத்தாக மாறி உடம்பில் எடையைக் கூட்டும். ஒரு கிலோ இரண்டு கிலோ கூடினலும் பதருமல், தேவைக்கு மேல் காலரி சேராத உணவுகளை உட்கொண்டு எடையைப் பாதுகாத்துக் கொள்ளலாம்.

**அப்படியும் கூடுகிறது என்றுல் என்ன செய்வது?**

வாயைக் கட்ட வேணடியது தான். கூடவே, காலரி சக்தியைச் செலவு செய்கிற மாதிரியான உடற் பயிற்சிகளைச் செய்ய வேண்டும். உடற் பயிற்சிகளையும் செய்து கொண்டு வழக்கம் போல் சாப்பிட்டுக் கொண்டிருந்தால் ஒருபுண்ணியமும் இல்லை.

ஓடலாம், நடக்கலாம். நீச்சல் பழகலாம். இவை எதுவுமே முடியவில்லை என்றுல், மொட்டை மாடியில், நின்ற இடத்திலேயே

# கும்பகர்ணனுக்கு என்ன நோய்?



# எடையைக் குறைப்பது எப்படி?



'ஸ்கிப்பிங்' ஆடலாம். (ஆண்களும் கூடத் தான்) இவையெல்லாம் கூடுதலான காலரி சக்தியைச் செலவிட உதவும்.

### உணவுக் கட்டுப்பாடு என்பது என்ன?

அதிகாலையில் கொஞ்சம் கஞ்சி குடித்து விட்டு, இடையில் ஒன்றிரண்டு முறை மோர் குடித்து விட்டு மத்தியானம் இரண்டு மணிக்குச் சாப்பிடுகிற ரிக்ஷாத் தொழிலாளிக்குச் சதைபோடாது. உடலுழைப்பு அங்கே சமனப் படுத்தி விடுகிறது.

மேலைநாடுகளில் எல்லாம் கோதுமை தவிடாலான "WHEAT BRAWN" உணவுப் பண்டங்களை அறிமுகப்படுத்தி விட்டார்கள். இவை போன்ற HIGH FIBRE DIET உட்கொள்வதால் வயிறு நிறையும். ஆனால் காலரி சக்தி அதிகமாவதில்லை.

பச்சைக் கீரை வகைகள், வாழைத் தண்டு, அரிசிப் பொரி, சாம்பல்பூசனிக்காய், சௌ சௌ, இளசான பீன்ஸ், முட்டை கோஸ், காலி ஃபிளவர், புடலங்காய், வெண்டைக் காய் வகைகளை எவ்வளவு வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

ஐஸ்கிரீம், சாக்லேட் வகைகள் எடையைக் கூட்டும். உருளைக் கிழங்கு, சேப்பங்கிழங்கு போன்றவற்றில்மாவுச் சத்து அதிகம் உண்டு. அறவே ஒதுக்கி விடலாம். இரண்டு சாக்லேட் தின்றால் பத்து காபியில் கிடைக்கிற காலரி சக்தி கூடி விடுகிறது.

வெண்ணெய், நெய் போன்ற இனங்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். பொதுவாக இனிப்புச் சத்து, மாவுச் சத்து அதிகமான பண்டங்களால் காலரி சக்தி அதிகமாகி விடும்.

### கும்பகர்ணன் கதை

**OBESITY**க்கு இதிகாச பூர்வமான ஒரு நல்ல உதாரணம் கும்ப கர்ணன் தான். போடப் போடத் தின்று கொண்டே இருப்பான். தின்று ஒரு வழியாய் முடித்து விட்டால் அப்புறம் ஒரே தூக்கம்தான். இதை வெறுமனே கதையாகப் பார்த்துச் சிரிப்பதை விட ஸீரியஸாகவே சிந்தனை பண்ண வேண்டும்.

நம்முடைய மூளையில் ஹைபோதாலமஸ் (**HYPOTHOLAMAS**) என்கிற பகுதி தான் பசியையும், சாப்பிட்ட பிறகு போதும் என்று ஏற்படுகிற உணர்வையும் கட்டுப் படுத்துகிறது. மத்திய நரம்பு மண்டலம் மூலம் இப்படிக் கட்டுப்படுத்தத் தவறி விடுகிற போதுதான் அகரப் பசி, கும்பகர்ணப் பசி எல்லாம் வந்து தொலைக்கிறது. இதிகாச காலக் கும்பகர்ணனுக்கு இப்படியொரு நோய் — ஹைபோதாலமஸ் கோளாறு ஏற்பட்டிருக்கக் கூடும்.

இன்றைக்கும், சில பள்ளிப் பிள்ளைகள் சாப்பிட்டு விட்டு வந்து வகுப்பறைகளில் தூங்கி விழுவதையும் பார்க்கிறோம். அதிகச் சாப்பாடு ஏன் தூக்கத்தை வரவழைக்கிறது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.



மேலட்டை

குமாரி மஞ்சுளா நரசிம்மன்

வண்ணப் படம்: ஏ.வி. பாஸ்கர்




''மலை கோட்டை உச்சிப் பிள்ளையார் கோவில் தெரியற மாதிரி ஆறுவது மாடியில ஒரு ரூம் குடுங்க சார்' ன்னு 'முடியவே முடியாது' ன்றீங்களே. இது உங்களுக்கே நல்லா இருக்கா?''

''என்ன செய்யறதுங்க. இது மதுரையாச்சே!''

உணவு செரிப்பதற்காக வயிற்றுப் பகுதியில் செரிமான உறுப்புக்கள் இயங்கும்போது இரத்த ஓட்டம் வழக்கத்தை விடக் கூடுதலாக வயிற்றுப் பக்கம் ஏற்படுகிறது. மூளைப் பகுதிக்குச் செல்கிற இரத்த ஓட்டம் ஓரளவு குறைகிறது. இதுவே மூளைப் பகுதி ஓய்வெடுக்கத் தொடங்கி உறக்கத்தில் ஆழ்ந்துவிடக் காரணம்.

## இன்றைய நடைமுறைகள்

பொதுவாக நூறு பேர்களை எடுத்துக் கொண்டால் ஆண்களில் முப்பது பேரும், பெண்களில் நாற்பது பேரும் 20 பவுண்டு அதிகமான எடையுள்ளவர்களாக இருக்கிறார்கள். சாதாரணமான அளவை விட 10 சதவீத கொழுப்புச் சத்து அதிகமாகி சதை போட்டு விடுகிறது.

முன்பெல்லாம் பெண்களுக்கு வீட்டு வேலைகள் நாள் முழுவதும் இருந்து கொண்டே இருக்கும். ஒரு மைல் இரண்டு மைல் என்று நடந்து போய்க் குடி தண்ணீர் கொண்டு வருவது. இல்லாவிட்டால் தாம்புக் கயிற்றில் குடத்தையோ, வாளியையோ கட்டிக் கிணற்றில் நீர் இறைப்பது. கல்லுரலில் கட்டி மாவு அரைப்பது. துணி துவைப்பது. அரிசி குத்துவது புடைப்பது என்று எத்தனையோ வேலைகள். இப்போது எல்லாம் பழங்கதையாகி வருகின்றன. குறிப்பாக நகர்ப்புறங்களில் வீட்டுக்குள்ளேயே குழாயைத் திருகினால் தண்ணீர், மிக்ஸியில், கிரைண்டரில், வாஷிங் மெஷினில் காரியங்கள்.

பிரியாணி கூட இப்போது டின்னில் தயாரிப்பாக வந்து விட்டது. உடலுழைப்பு என்பது அருகிப் போய் விட்ட நிலையிலும் பழைய காலத்துச் சாப்பாட்டு முறையையே பின் பற்றலாமோ?

## கூடுதல் சதையில் வரும் அபாயங்கள்

உடம்பே ஒரு இயந்திரம்தான். எண்பது கிலோ உடம்பில் வேலை செய்கிற இருதயம் என்கிற மெஷினை, திடீரென்று நூறு கிலோ ஆகி வேலை வாங்கினால் கோளாறு வராமல் என்ன செய்யும்?

பொதுவாக, பேறு கால அனுபவத்தில் இருக்கிற பெண்கள் பிறக்கப் போகிற குழந்தைக்கும் சேர்த்து இரண்டு பங்காகச் சாப்பிட வேண்டும் என்று அசட்டுத்தனமாக ஒரு நம்பிக்கை உண்டு.

இப்போதெல்லாம் பிரசவத்தை எதிர் நோக்கியிருக்கிற பெண்களுக்கு டாக்டர்கள் தருகிற முக்கியமான ஆலோசனையே எடை கூடாமல் இருக்க வேண்டும் என்பது தான். அதாவது அவளுக்கு இருக்க வேண்டிய எடையும், வளரும் குழந்தையின் எடையும் தவிரக் கூடுதலாகாமல் என்று பொருள்படும்.

கர்ப்பிணிப் பெண்ணுக்கு எடை கூடினால் இடுப்புச் சதை அதிகமாகி விடும். இதனால் பிள்ளைப் பேறு நேரத்தில் அவளால் வயிற்றைச் சுருக்கி விரித்துக் குழந்தையை வெளியேற்ற முடியாமல் போய் விடும். சிஸேரியன் செய்ய நேர்ந்தால் தையல் போடுவதும் சிரமம். சுலபமாகப் பிரிந்து விடும். அப்படி இப்படி என்று சர்ஜரி திருப்திகரமாக ஆகி விட்டாலும் கூட அடி வயிற்றுப் பகுதியில் பின்னாளில் ஹெர்னியா வரவும் கூடும்.

பெரியவர்கள் சொல்வார்கள். கர்ப்பிணிப் பெண்கள் உடலை வருத்தி வேலை செய்வது நல்லது என்று. இதனால் சதையும் போடாது. அடிவயிற்றுப் பகுதி தசைகள் நன்றாக நெகிழ்ந்து கொடுத்து சுகப் பிரசவம் உண்டாகும் என்பதை அவர்கள் அனுபவ ரீதியாக நன்கு அறிந்திருந்தார்கள்.

## சில ஆலோசனைகள்

நம்மிடையே ஒரு சம்பிரதாயமான குசலம் விசாரிப்பு உண்டு. ஒரு மாதம் இரண்டு மாதம் கழித்து ஒருவரைச் சந்தித்தால் நம்மவர்கள் கேட்கிற கேள்வி ''என்ன இப்படி இளைத்துப் போய் விட்டாய்?'' என்



## அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாக தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது.

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?










*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

பதுதான். அவன் இளைத்தே போயிருக்க மாட்டான். இருந்தாலும் கேட்டு வைப்பார்கள். இதை ஸீரியஸாக எடுத்துக் கொண்டு நம்ம ஆளும் நிறையச் சாப்பிட ஆரம்பிப்பான். மேலை நாடுகளில் இப்படி விசாரிப்பு இருக்காது. "ஹௌ நைஸ் யு ஆர்?"- என்கிற மாதிரியே விசாரிப்பார்கள்.

ஆல்க்ஹால் பழக்கம் காரணமாகவும் எடை கூடும். பியர் போன்ற பானங்களை அதிகம் குடிக்கிறீர்களா என்று உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள். குறைத்துக் கொள்ளுங்கள்.

கவலையால் உடம்பு இளைப்பது போலவே, அதிக ஆனந்தமும் உடல் பருமனைக் கூடுதலாக்கும். புதிதாகக் கல்யாணமானவர்கள் நல்ல உதாரணம். இவையெல்லாம் ஹார்மோன் விளைவுகள் தான். வயதுக்கு வருகிற பெண்களுக்கும் இதே ஹார்மோன் விளைவுகளால் முகப்பரு ஏற்படுகிற மாதிரி, உடல் பருமனும் ஏற்படும். உடலுழைப்பைக் கூடுதலாக்கியே இவற்றைச் சீராக்கி விடலாம்.

மானேஜிங்டைரக்டரின் சம்சாரம் நடந்து வெளியே வரலாமோ என்கிற மாதிரி போலி மரியாதைகளால் கெடுதல்தான். நடந்து வந்தால் கருமித்தனம் என்று எண்ணக் கூடாது. பள்ளியாசிரியர்கள், வேலை பார்க்கும் பெண்களெல்லாம் இப்படி உடல் பருமனால் அவதியுறுவதில்லை. பொதுவாகவே, "லோயர் இன்கம் குரூப்" மக்கள் இந்தப் பாதிப்புக்கு ஆளாவதில்லை. எனினும் மேற்பார்வைப் பணியில் உள்ளவர்கள், கம்ப்யூட்டர் மாதிரி நுட்பமான கருவிகளைக் கையாளுகிறவர்கள் அகப்பட்டுக் கொள்வார்கள்.

பிரச்னைகளிலிருந்து தப்பித்துக் கொள்ள முயல்கிறவர்களில் சிலர் சாப்பாட்டில் தீவிர கவனம் செலுத்துவது மனோ தத்துவ ரீதியான ஒரு நடை முறை. பசியில்லாத போதும் கவலைகளிலிருந்து விடுபட எதையாவது சாப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள்.

வரவுக்கேற்ற செலவு என்ற கொள்கையை உடல் பராமரிப்பைப் பொறுத்த வரை சற்று வித்தியாசமாக அணுக வேண்டும். சேமிப்பு சமாசாரமும் இந்த காலரி சக்தி விவகாரத்தில் வேண்டியதில்லை. ஆக வேலைக்கு ஏற்ற உணவு என்று பழக்கப் படுத்திக் கொண்டால் போதுமானது. இதற்கு ஒரு விதமாக மனோதிடம் வேண்டும். நீங்கள் மன வலிமையுடையவரா என்பதை உணவுப் பழக்கத்தை வைத்தே சொல்லி விடலாம்.

இந்தப் பண்டம் கூடாது என்றால் கூடாது தான். 'எத்தனை காலம் வாழ்ந்து விடப் போகிறோம். இருக்கிற வரை நன்றாகச் சாப்பிட்டு அனுபவிப்போம்' என்கிற வறட்டுத் தத்துவம் பேசுகிறவர்களைச் சந்தித்திருப்போம். இது தத்துவமில்லை. கையாலாகாத தனம் தான்.

உடம்பு ஒரு அழகான கோவில் மாதிரி. ரஸனைக்கு உரியது. இந்த அழகு உணர்ச்சியை வளர்த்துக் கொள்கிறபோது, கொஞ்சம் சதை கூடினாலும் மனம் அருவருக்கவே செய்யும். உடல் அழகுதான் நல்ல ஆரோக்கியத்தையும் தரும்.

**"YOU ARE WHAT YOU EAT"** (உங்கள் உணவுப் பழக்கத்துக்கு ஏற்பவே நீங்கள் இருக்க முடியும்) என்று ஒரு வழக்கு உண்டு. இதில் கவனம் செலுத்துங்கள். உங்களுக்கு எவ்வளவு எடை இருக்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். அவ்வப்போது தேவைக்கு ஏற்ப உணவைக் கட்டுப் படுத்துங்கள். சாதாரணமாக நினைக்கிற நொறுக்குத்தீனி கூட மோசமான விளைவுகளைத் தருகிறது. ஸினிமாப் பார்க்கும் போதோ, வீட்டில் வெறுமனே வளைய வரும் போதோ கூட வாய் எதையாவது மென்று கொண்டிருக்கும். இந்தப் பழக்கத்தை அறவே நிறுத்துங்கள்.

முக்கியமாக நாளமில்லாச் சுரப்பிகளில் ஏற்படுகிற கோளாறுகளால் எடை கூடும். பிட்யூட்டரி, தைராய்டு சுரப்பிகள், டயபெடிஸ், கூடுதல் கொலஸ்ட்ரால் என்று மருத்துவ ரீதியான காரணங்களால் திடீர் என்று உடல் பருமனாகலாம். உங்கள் ஒழுங்கான உணவு, கவனிப்பையும் மீறி திடீர் என்று சதை போட்டால், டாக்டர் இருக்கவே இருக்கிறார்.

எதற்கும் வருமுன் காப்பது என்பது உணவு உடல்வாகு விஷயத்தில் நிச்சயம் பலன் தரும்.

பேட்டிக் கட்டுரை

**'நகர் வாலா.'**

ஒருவன் : எவ்வளவு துன்பம் வந்தாலும் நான் சிரிச்சுக்கிட்டே இருப்பேன்!

மற்றவன் : அப்படியா? ஆச்சர்யமாயிருக்கே!

ஒருவன் : ஆனா ஒரே ஒரு கண்டிஷன். அத்தனை துன்பமும் மத்தவங்களுக்கு வரணும்!

**— நல்லாலம் காசிதாசன் —**



# மின்னும் மேனி
# மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி... என்னாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவை யான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

## ஜப்பானிய இளைஞர்கள்

# காதல் திருமணம் ஒரு பிரச்னையல்ல!



ஜப்பானில் இருந்து கொண்டு இந்திய சுதந்திரத்துக்குப் போராடியவரும், இந்தியா — ஜப்பான் நட்புறவுக்குச் சேவை புரிந்து வருபவருமான நாயர் ஸானுக்கு ஜப்பானிய சக்கரவர்த்தி மிகப் பெரிய விருது வழங்கிக் கௌரவித்துள்ளார். இதையொட்டி, நாயர் ஸானுக்குச் சமீபத்தில் சென்னையில் பாராட்டு விழா நடைபெற்றது.

நாயர் ஸானை ஹோட்டல் சோழாவின் காப்பி ஷாப்பில் சந்தித்தேன். வயது 80. 20 வயதில் ஜப்பானுக்குப் போனவர். இளைஞர் ஆண்டாயிற்றே என்பதால் ஜப்பானிய இளைஞர்களைப் பற்றிக் கேட்டேன். உற்சாகமாகப் பேசினார் இந்த எண்பது வயது இளைஞர்.:

* ஜப்பானில் 6+3+3 கல்வி முறை நடைமுறையில் உள்ளது. ஏழு வயதில் பள்ளியில் சேர்க்கிறார்கள். 6 வருட துவக்க நிலைப் படிப்பும், பிறகு 3 வருட இடை நிலைப் படிப்பும் கம்பல்ஸரி. பின் 3 வருடம் மேல் நிலைப் படிப்பு.

* படிக்க நிறைய பள்ளிகள். பெற்றோருடன் வீட்டில் தங்கியும் படிப்பதுண்டு; ஹாஸ்டல்களில் இருந்தும் படிப்பதுண்டு. அமெரிக்கா போல, படிக்கும் போதே வேலை செய்து சம்பாதிப்பது நடைமுறையில் இல்லை. ஆங்காங்கே ஒரு சிலர் வேலை செய்வதுண்டு. அது

* பாராட்டு விழாவில் நாயர் ஸானை கௌரவிக்கிறார் தொழிலமைச்சர் ராஜாராம்.



கூட பாக்கெட் மணிக்காக, ஜாலியாய் செலவு செய்ய.

* இலவசக் கல்வி, இலவச உணவு, இலவச உடை என்கிற வேலையெல்லாம் இல்லை. அட்மிஷன் பிரச்னையும் இல்லை. ஜப்பானிய மொழியில் தான் பாடங்கள் சொல்லித் தருவார்கள். உலகின் எந்த ஒரு புது விஷயமும், உடனே ஜப்பானிய மொழியில், மொழிபெயர்ப்பு செய்யப்பட்டு விடும். ஆங்கிலம் அடிஷனலாய் படிக்கலாம்.

* பள்ளிப் படிப்பு முடிந்ததும், கல்லூரிக்குப் போகிறார்கள். நுழைவுத் தேர்வு உண்டு. தேறினால் தான் அட்மிஷன். இங்கே உள்ளது போல, பின் பக்கமாக அட்மிஷன் வாங்குவதெல்லாம் நடக்காத காரியம். கல்வியின் தரம் மிக உயர்வு. மெடிக்கல் 6 வருஷம்; இஞ்சினியரிங், மற்ற ஆர்ட்ஸ், சயன்ஸ் எல்லாம் 3 வருஷம்.

* நாடெங்கும் நிறைய விளையாட்டு மைதானங்கள். பயிற்சியளிக்க வழிகாட்டிகள். மாலை நேரத்தில் ஆண்களும், பெண்களும் நிச்சயம் விளையாடுவார்கள். பேஸ்பால், பாட்மின்டன், கால்பந்து, டென்னிஸ், ஸ்விம்மிங் போன்றவை முக்கியமானவை. விஞ்சியராய் பயிற்சி பெறுவதால் ஆரோக்கியமாய் இருப்பதுடன் ஒலிம்பிக் போன்ற சர்வதேச அரங்கில் கணிசமான அளவில் மெடல்களை அள்ளிக் கொண்டும் போகிறார்கள்.

* கல்லூரிப் படிப்புக்குப் பின், வேலை தேடுவது பெரிய பிரச்னையே அல்ல. பல வித வேலைகளுக்கும் நிறையப் பேர் தேவைப்படுகிறார்கள். ஆட்கள் இருப்பதற்கேற்ப, நிறைய வேலைகளும் உள்ளன. இருந்தும் செலக்ஷன் இன்டர்வியூ மூலம் தான். வேலையில்லாத ஜப்பானியனைப் பார்க்கவே முடியாது. எடுத்த எடுப்பில் சம்பளம் சுமார் ஒரு லட்சம் யென்கள். (20 யென்கள் = ஒரு ரூபாய்). வாழ்க்கைச் செலவும் அதிகமே.

* வெளி நாட்டிலிருந்து வருகிறவர்கள், தொழில் நுட்பங்களைக் கற்றுக் கொண்டு, திரும்பிப் போய் விட வேண்டியது தான். துபாய் போல ஜப்பான் போய் பணம் சம்பாதித்து ஊருக்கு அனுப்புகிறதெல்லாம் நடக்காது.

* ஜப்பானிய இளைஞர்கள், தம்மால் குடும்பத்தைக் காப்பாற்ற முடியும் என்கிற தன்னம்பிக்கை வந்த பிறகு தான் கல்யாணத்தைப் பற்றி நினைக்கிறார்கள். பெண்களும் நிறையப் பேர் வேலைக்குப் போகிறார்கள்.

* முன்பெல்லாம் பெற்றோர்களாய்ப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைப்பார்கள். இப்போது காதல் திருமணங்கள் அதிகரித்துள்ளன. ஆனால் காதல் திருமணங்கள் பெரிய பிரச்னைகளாக்கப்படுவதில்லை.

* இளைய தலைமுறையினர், மேற்கத்திய நாடுகள் போல, போதைப்பொருட்களுக்கு அடிமையாவதில்லை.

* கிரிக்கெட் விளையாட்டு கிடையாது. 'வேஸ்ட் ஆஃப் டைம்' என்று ஜப்பானியர் எண்ணுவார்கள். குறைந்த நேரத்தில் முடிகிற, விறுவிறுப்பான விளையாட்டுகளுக்குத்தான் வரவேற்பு.

* விடை பெறும் போது கேட்டேன். "ஜப்பானியர்கள் அமெரிக்க ஆதரவாளர்களா? ரஷ்ய ஆதரவாளர்களா?"

* அவர் சொன்னார் அழுத்தமாக: "ஜப்பானிய ஆதரவாளர்கள்!"

சந்திப்பு: மௌஷ்மி

உள்நாட்டுப் பிரச்சினைகள்
வெளிநாட்டு பயணம்
கட்சி
கூண்டுக்கு வந்து தான் ஆகணும்!








# கல்கி



1985 ஏப்ரல் 21
மலர்: 43 இதழ்: 38
குரோதன சித்திரை 9


## பிரதமர் நீட்டியுள்ள நேசக்கரம்

பிரதமர் ராஜீவ்காந்தி அவர்களைப் பாராட்ட மீண்டும் ஒரு சந்தர்ப்பத்தை அவரே ஏற்படுத்தித் தந்திருக்கிறார். வாழ்த்துகிறோம். ஏற்கெனவே லோங்கோவால் உள்ளிட்ட பல அகாலி தலைவர்களை விடுதலை செய்து நமது மதிப்பில் உயர்ந்த ராஜீவ், இப்போது மேலும் சில அம்சங்களில் விட்டுக் கொடுத்து, அகாலிகளின் நிபந்தனைகளில் அநேகமாக அனைத்தையுமே ஏற்றுக் கொண்டு விட்டிருக்கிறார். இந்திராகாந்தியின் மரணத்துக்குப் பிறகு புதுதில்லி வட்டாரத்தில் நடந்த வன்முறைகளுக்கு நீதி விசாரணை; அகில இந்திய சீக்கிய மாணவர் சங்கத்தின் மீது இருந்த தடை நீக்கம்; இன்னமும் சிறையில் உள்ள மற்றும் பல சீக்கியத் தலைவர்களின் விடுதலை ஆகிய புதிய முடிவுகள் ராஜீவை ஓர் அரசியல்வாதியாக மட்டும் அல்லாது, தேர்ந்த, முதிர்ந்த ராஜதந்திரியாகவும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. வறட்டு ஜம்பம் பாராமல் நடந்து கொண்டதில், பஞ்சாப் பிரச்னை இழுபறியாக நீடிக்காமல் தீர்வு காணப்பட வேண்டும் என்பதில் அவருக்குள்ள மனப்பூர்வமான ஆர்வம், அக்கறை தெரிய வருகிறது. சீக்கியர் நம் விரோதிகள் அல்ல சகோதரர்கள் என்பதைப் புரிந்து கொண்டு இப்படி பலவிதங்களில் விட்டுக் கொடுத்ததின் மூலம் ராஜீவ் பலவீனப்பட்டு விடவில்லை. மாறாக இந்தத் தீரம் மிக்க நடவடிக்கை காரணமாக அவர் கை பலப்படுகிறது; அவர் புகழ் ஓங்குகிறது; சீக்கிய மக்களின் நன்மதிப்புக்கு அவர் பாத்திரராகிறார்.

இவ்வளவு தூரம் பிரதமர் விட்டுக் கொடுத்த பிறகு இன்னமும் சீக்கியத் தலைவர்கள் பேச்சு வார்த்தைக்கு இணங்காமல் முரண்டு பண்ணிக் கொண்டிருந்தால் அவர்கள் மீது சீக்கிய மக்களே வெறுப்படைவார்கள். பாரத மக்கள் அனைவரது அனுதாபத்தையும் அத்தலைவர்கள் அடியோடு இழப்பார்கள். எனவே லோங்கோவாலும் மற்றவர்களும் ராஜீவின் நல்லெண்ணத்தைத் தாங்களும் எதிரொலிப்பதே போல் நடந்து கொள்ள வேண்டும். அதற்கு முதற்படியாக ஏப்ரல் 13 முதல் நடத்துவதாக அறிவித்திருந்த கிளர்ச்சியை வாபஸ் பெற வேண்டும்.

கிளர்ச்சிகளால் சாதிக்கப்படக் கூடியது வெறுப்பும் விரோதமுமே. ஆனந்த்பூர் சாகிப் தீர்மானங்களைக் கைவிட்டால்தான் பேசுவேன் என்று ராஜீவ் நிபந்தனை போடவில்லை, சண்டிகார் பஞ்சாபுக்கே என்று இந்திராகாந்தி அளித்த உறுதிமொழியின்படி நடப்பதாக ஏற்கெனவே அவர் கூறியாகி விட்டது. இன்னமும் பாக்கியிருக்கும் பிரச்னைகளைப் பாரதத்தின் ஒற்றுமைக்கும் தேசியத்துக்கும் பாதிப்பில்லாத அளவில் பேசி சுமுகமான முடிவுகளுக்கு வருவதே புத்திசாலித்தனம். கலிஸ்தான் கோஷம் கூடாது என்று விவேகத்துடன் உதறி எறிந்த லோங்கோவாலும் மற்ற சீக்கியத் தலைவர்களும் பிரதமர் நீட்டியுள்ள நேசக்கரத்தைப் பற்றட்டும். பஞ்சாப், பாரத அன்னையின் மணி மகுடமாய்த் திகழட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

---

உங்களுக்கு அறிமுகமான மிகச் சிறந்த இளைஞராக யாரைக் கருதுகிறீர்கள்? என்று வாசகர்களைக் கேட்டிருந்தோம்.....

**சி. கணேசன்**



கதை அளக்கிறேன் என்று எண்ணாதீர்கள். நூற்றுக்கு நூறு நிஜம்! இந்த பள்ளி ஆசிரியர் மாணவர்களாலும் ஊர் மக்களாலும் நேசிக்கப்படுவது மட்டுமல்ல, அவர் மாற்றலாகி புறப்பட்ட போது கண்ணீர் வடித்தார்கள்! மாற்றல் உத்தரவை ரத்து செய்யக் கூட அதிகாரிகளைச் சந்தித்து முயற்சி எடுத்துக் கொண்டார்கள். காரணம் என்ன? 'பங்கேற்பு, வளர்ச்சி, அமைதி' ஆகிய இளைஞர் ஆண்டு லட்சியங்களைக் கணேசன் என்றைக்குமே கடைப்பிடித்து வந்திருப்பதுதான். "சமுதாயப் பணி மன்றம்" என்ற அமைப்பை உருவாக்கி செயலராக விளங்கி எங்கள் பகுதி கிராமங்கள் வளர்ச்சியில் பங்கேற்றார். ஒவ்வொரு கிராமத்திலும் "இளைஞர் நற்பணி மன்ற"ங்களை உருவாக்கினார். அரசு அதிகாரிகளுக்கு மக்களின் தேவைகளை எடுத்துக் கூறி அவை நிறைவேற வாதாடி வெற்றி பெற்றார். புதிய சலுகைகளைப் பெற்றுத் தந்தார். "நேயர் பேரவை" உருவாக்கி பாண்டிச்சேரி வானொலி நிலையத்துக்கும் காரைப் பகுதி நேயர்களுக்கும் இடையே ஒரு பாலமாக அது விளங்கச் செய்தார். உலக சமாதான ஒருமைப்பாட்டுக் கழகத்தில் செயற் குழு உறுப்பினர். எழுத்தாளரும் கூட! இலங்கைத் தமிழருக்கு உதவி, கண்தானத்துக்குத் தூண்டுதல் போன்றவை இதர சிறப்புப் பணிகள்.

— மு. பாலகிருஷ்ணன், கரக்குடி

# இது இளைஞர் அணி

**தவமணிராஜ்**



எனது இனிய நண்பர் ஆர். தவமணிராஜ் எம். ஏ. ஆங்கிலம் பட்டம் பெற்று தற்போது ஒரத்த நாடு அரசு கல்வியியல் கல்லூரியில் பி. எட். பயின்று வருகிறார். பட்டப் படிப்பின் போதே விளையாட்டுத் துறையில் சிறந்து பல வெற்றிக் கேடயங்களைப் பெற்றவர். நடனத்தில் ஆர்வம் கொண்டு குடந்தை தர்மாம்பாளிடம் பரத நாட்டியம் பயின்றார். அரங்கேறினார். நடனப் போட்டிகளில் பரிசுகள் பெற்றார். இவரின் பல குரல் நிகழ்ச்சி மிகவும் பாப்புலர். "தவமணிராஜ் குரல் வளையில் ஒரு கம்ப்யூட்டரே இயங்குகிறது" என்று கல்லூரி முதல்வர் திரு பாஸ்கரனால் புகழப்பட்டவர். குடந்தை மிருதங்க வித்வான் சபேசய்யரிடம் மூன்றாண்டுகளாக மிருதங்கம் பயில்கிறார். ஐம்பதுக்கும் மேற்பட்ட வெற்றிக் கேடயங்கள், நூறுக்கு மேற்பட்ட சான்றிதழ்களைக் குவித்துள்ள தவமணிராஜு டன் சேர்ந்து நாடகங்களில் நடித்தவர் இன்று திரைப்படத் துறையில் பிரகாசிக்கின்றனர். தவமணிராஜை அழைத்த போது மறுத்து விட்டார். ஆச்சரியமாயில்லை!

— கோவி இராசன், கும்பகோணம்.



## சந்திரா

ஐந்து வயது முதல் சந்திராவுக்கு பரத நாட்டியப் பயிற்சி அளிக்கப்பட்டு வந்தது. கூடவே கர்நாடக இசைப் பயிற்சியும் பெற்றாள். ஆதர்ஷ் வித்யாலயாவில் எப்போதும் வகுப்பில் முதல் மாணவி. பி. காம் பட்டப் படிப்பில் மாநில முதல் மாணவியாகத் தேர்ந்து தேசிய விருது பெற்றாள். எம். பி. ஏ. படிக்க அரசின் உபகாரச் சம்பளம் கிடைத்தது. சமஸ்கிருதம், ஹிந்தி, ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, வங்காளி என்று பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். திருமணத்திற்குப் பின் கணவர் சம்மதத்துடன் சார்ட்டர்ட் அகௌண்டண்ட் நிறுவனத்தில் ஆறே மாதம் பயிற்சி பெற்று ஸி. ஏ. ஆனார். பொறுப்பான பதவி வகிக்கிறார். பிடித்தமான பொழுது போக்கு ஆங்கிலத்தில் கவிதைகள் எழுதுதல். இலக்கிய நயம் சொட்டும் அவற்றில்.

— ஸீதா ராகவன், சென்னை.

## அந்தோணிதாஸன்



முதியோர் கல்வியில் ஈடுபாடு கொண்டு சேவை புரிந்து வரும் என் இனிய நண்பன் அந்தோணிதாசன் குழந்தைகளுக்கும் டியூஷன் சொல்லித் தருகிறார் மாலை நேரங்களில். ஊரில் உள்ள பலருக்கும் தயங்காமல் சுகாதாரத்தை விளக்கி எடுத்துக் கூறுவார். இதையே தமது முக்கிய சமுதாயத் தொண்டாகவும் கருதுகிறார். நினைவின் அலைகள், கண்ணீர் மனம் என்ற இரண்டு நூல்களின் ஆசிரியர். கவிதை எழுதுவதிலும் நாட்டம் உண்டு.

— எஸ். ஏகாம்பரம், திருப்பத்தூர்.

## சற்குணராஜ்

இருபத்தொரு வயதான இசை ஞானம் மிக்க இனிய இளைஞர். இவரது கவிதை மாரி புதுவை மாநிலம் முழுதும் பெய்து அநேக மனங்களைக் குளிர்வித்திருக்கிறது. தவிர பல நாடகங்களில் நடித்து பாராட்டும் பதக்கமும் பெற்றவர். இவரது கவிதைப் பூக்கள் ''நிர்வாண உண்மைகள்'' என்ற தலைப்பில் நூல் வடிவம் பெற்றுள்ளன. வீட்டுக்கு ஒரு மரம் வளர்த்தல், ரத்த தானம் செய்தல் போன்றவற்றை ஊக்குவிக்கும் சமூக சேவையைத் தமது கடமையாகக் கொண்டவர். பல பத்திரிகைகளுடன் தொடர்பு கொண்டு எழுதி வருகிறார். இத்தனை சிறப்புக்களுக்கு மணி மகுடமாகத் திகழ்வது ''மாணவ நல்வழி மன்ற''த்தின் தலைவராக இருந்து மற்ற மாணவர்களை வழி நடத்திச் செல்லும் உயர் பண்பேயாகும். இம் மன்றத்தின் மூலம் மாதம் ஒரு நிகழ்ச்சி கவியரங்கம், கலந்துரையாடல் என்று விதம் விதமாக நடக்கிறது. கண் பார்வையற்றோருக்கு லூயி பிரெயில் பார்வையற்றோர் சங்கம் மூலம் பணியாற்றுகிறார்.

— இரா ஜெயபாலன், காரைக்கால்.

## அரு. அழ. அண்ணாமலை



புதுச்சேரி இளம் எழுத்தாளர் சங்கத்தின் தலைவர். பத்திரிகைத் துறையில் அதிக ஈடுபாடு கொண்டவர். ''துணுக்குத் திலகம்'' என்ற பட்டத்தைப் பெற்றவர்! இவரது சிறு கதைகள் பல சஞ்சிகைகளில் பிரசுரமாகி பாராட்டுப் பெற்றுள்ளன எனினும் இவர் காதல் கொண்டிருப்பது கவிதை மீது. பேட்டிக் கட்டுரைகளும் பல எழுதி பிரசுரமாவதில் வெற்றி பெற்றுள்ளார். இவர் ஓவியக் கலைஞர் மட்டுமல்ல; நல்லதொரு புகைப்படக் கலைஞரும் ஆவார். திறமை ஜோதியாய் ஒளி வீசுகிறார் இந்த இளைஞர்.

— இரா. புதுவை வேலு, புதுச்சேரி.

# எதிர்காலம் உங்கள் கையில்

பல்வேறு துறைகளிலும் இருக்கிற வேலை வாய்ப்புகள் பற்றி எழுதப் போவதைப் பற்றி, ஓய்வு பெற்ற ஒரு உயர் அரசாங்க அதிகாரியுடன் பேசிக் கொண்டிருந்தபோது, அவர், ''இந்த ஷார்ட் ஹாண்ட், பற்றி கண்டிப்பாய் நீ எழுத வேண்டும். ஷார்ட் ஹாண்ட் என்கிற தெய்வம் இன்று இந்தியாவில் மட்டுமில்லே, உலகம் முழுக்க எத்தனை பேரை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது தெரியுமா?'' என்று குறிப்பிட்டார்.

பட்டப் படிப்பெல்லாம் முடித்தபின், டைப்ரைட்டிங் ஷார்ட் ஹாண்ட் படிக்கலாம், என்று தள்ளிப் போடுவது உசிதமில்லை. டிகிரி சேர்ந்தவுடனேயே, உங்களது எதிர்காலம் ஓரளவுக்குப் பிடிபட்டுவிடும். நீங்கள் தொழிற்கல்விக்குப் போகப் போவதில்லை என்று தெரிந்தவுடன், பேசாமல், டைப் ரைட்டிங் ஷார்ட் ஹாண்ட் சேர்ந்து விடுவது புத்திசாலித்தனம். அப்போதுதான், மூனு வருஷத்தில் கையில் டிகிரியுடன் வேலைதேடும் போது டைப் ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் இரண்டும் துணை நிற்கும். தொழிற் கல்வி பயிலுபவர்களும் இவற்றைக் கற்று வைத்துக் கொள்வது நல்லது. நிச்சயமாக வாழ்க்கையில் உதவும்.

இங்கே ஒரு விஷயம். சகட்டு மேனிக்கு ஏதாவது ஒரு இன்ஸ்டிடியூட்டில் சேர்ந்து விடாதீர்கள். ஏற்கெனவே படித்தவர்கள், படித்துக் கொண்டிருப்பவர்களை ஒரு நடை போய்க் கொஞ்சம் விசாரித்துப் பாருங்கள், ரிசல்ட்டுகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். பின்பு சேருவது பற்றி முடிவு பண்ணுங்கள்.

அதுசரி, ''சுருக்கெழுத்து கற்றுக் கொள்வது என்ன ரொம்பக் கஷ்டமான காரியமா? இதற்கு இன்ஸ்டிடியூட்டின் தரம் பற்றி அவ்வளவு விசாரணை தேவையா?'' தேவைதான். ஷார்ட் ஹாண்ட் கற்றுத் தருவதும் கற்றுக் கொள்வதும் சிரமமான காரியங்களே. ஒரு இன்ஸ்டிடியூட் நடத்துகிறவர் சொன்னார்:

''ஷார்ட் ஹாண்ட் என்பது பி. ஏ. பி. எஸ்.ஸி. டிகிரி படிப்பது போல இல்லே; பரீட்சைக்கு ஒரு சில வாரங்கள் முன்னால், மற்ற எல்லா' விவகாரங்களையும் மூட்டை கட்டி வைத்துவிட்டு, சீரியஸாகப் படித்து, நல்ல மாதிரியாய்த் தேறிவிடுகிற கதை இங்கே நடக்காது. தினமும் குறைந்த பட்சம் சுமார் இரண்டு மணி நேரமாவது, வீட்டில் எழுதிப் பழக வேண்டும். இதற்கு ரொம்பப் பேருக்கு பொறுமை இருக்காது. ஒரே மாதத்தில், ஹோம் ஒர்க் கெடுபிடி தாங்காமல், இன்ஸ்டிடியூட்டுக்கு 'டாடா' சொல்லிவிட்டுப் போய் விடுவார்கள். இன்னொரு விஷயம், இங்கிலீஷில் இவர்கள் கொஞ்சம் ஸ்டிராங்காய் இருக்க வேண்டும். இல்லை யெனில் திணறி விடுவார்கள். டைப் ரைட்டிங் ஷார்ட் ஹாண்ட் இரண்டிலும் தேற இன்ஸ்டிடியூட்டில் சேருகிறவர்களில் மிகப் பலர் கடைசியில் டைப்ரைட்டிங் கற்றுக் கொண்டதோடு திருப்தி அடைந்து விடுவார்கள்!''

பரீட்சைகள் பற்றிப் பார்க்கலாமா? மாநில அரசு வருடத்துக்கு இரண்டு முறை நடத்துகிற தேர்வில் தேற வேண்டும். நிமிடத்துக்கு 80 வார்த்தைகள் எழுத வேண்டியிருக்கும், லோயர் பரீட்சையில். அடுத்து நிமிடத்துக்கு நூறு வார்த்தைகள் (இன்டர்), அடுத்தது ஹையர் (நிமிடத்துக்கு 120 வார்த்தைகள்). இதற்குப் பின் நிமிடத்துக்கு 130, 160, 200 என்று பரீட்சைகளும் இருக்கின்றன. இஷ்டமிருந்தால் எழுதலாம்.

வேலை வாய்ப்பு? தினசரி நியூஸ் பேப்பர் படிக்கிறவர்களுக்குத் தெரியும், ஸ்டெனோகிராபர் வேலைக்கு எத்தனை டிமாண்ட் என்று. பாங்குகள், அரசு மற்றும் தனியார் நிறுவனங்கள், என்று ஏகப்பட்ட வாய்ப்புகள். சம்பளம், சிறிய கம்பெனிகளாய் இருந்தால் குறைவாய்த்தான் இருக்கும். எனக்குத் தெரிந்து, இருநூறு ரூபாய் வாங்கும் ஸ்டெனோவும் இருக்கிறார்கள்; எடுத்த எடுப்பிலேயே நாலு இலக்கம் வாங்குகிறவர்களும் இருக்கிறார்கள். அரசாங்கத்தில் நல்ல வாய்ப்பு இருக்கிறது. ஆனால் அங்கே ஏகப்பட்ட போட்டி.

''தமிழ் சுருக்கெழுத்து, இங்கிலீஷைவிடக் கஷ்டமானது. இரண்டிலும் தேறிவிட்டாலோ, நிச்சயம் வேலை கிடைத்துவிடும். நல்ல சம்பளம்'' என்று அடித்துச் சொல்கிறார் இரண்டு சுருக்கெழுத்தும் தெரிந்த ஒருவர்.

**—எஸ். சந்திரமௌலி.**

வேண்டுகோள்:

அடுத்தவர் வாழ்க்கை — அனுபவம் நமக்கொரு படிப்பினை — வழிகாட்டி.

படித்து முடித்துவிட்டு, சொந்தமாய் ஏதாவது ஒரு தொழில் ஆரம்பித்து, வெற்றிகரமாய் நடத்தி வருகிறவர்கள், தங்களுடைய வெற்றிக்கதை பற்றிய முழு விவரங்களையும் எழுதி அனுப்புங்கள். அல்லது வாசகர்கள் தங்களுக்குத் தெரிந்தவர்கள் யாராவது அப்படி இருந்தால், முழு விவரங்களையும் கேட்டு எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் சன்மானம் உண்டு. மற்றவர்களுக்கு உபயோகமாகவும் இருக்குமே!



# நீலன் சிலை விவகாரம்

ராஜ்மோகன் காந்தி

ஸி. ஆரின் கட்டுக்கடங்கிய கிண்டலைத் தூண்டிய வெகு சிலரில் மன்ரோ ஒருவர். அவர் மேலும் கூறுகிறார்:

"நான் ஃப்ரெஞ்சு மொழி பெயர்ப்புப் பணியையும் அதிகப்படியாகச் செய்து வந்தேன். இதற்காக தனியே ரூ 20/— பெற்று வந்தேன். இது குறித்து ஸி. ஆர். என்னைக் கேலி செய்வதுண்டு. மொழி பெயர்ப்பாளர் பணி ஒரு கௌரவப் பதவியே. நான் செய்தவேலை அதிகமில்லை. அவ்வப்போது பாண்டிச்சேரி சம்பந்த மான சில விஷயங்களில் ஃப்ரெஞ்சுக் கடிதங்களை மொழி பெயர்ப்பது மட்டுமே. இதற்குப் போய்த் தனியே பணம் வாங்கு வதா என்பது ஸி. ஆரின் கருத்து.

"ஒரு முறை ஸி. ஆர் என் அறைக்கு வந்தார். பெரியதொரு ஃப்ரெஞ்சுப் பத்திரத்தை என் மேஜை மீது போட்டு விட்டு 'இதை மொழி பெயர்த்து விடு' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். பெருமூச்சுடன் வேலையை ஆரம்பித் தேன். இரண்டு வரிகள் படிப்பதற்குள் தெரிந்து விட்டது ஸி. ஆர். என்னுடன் விளையாடுகிறார் என்று. அவர் என்னிடம் கொடுத்துச் சென்றது மகாத்மா காந்தி யின் பிரபலமான கட்டுரைகளின் ஃப்ரெஞ்சு வடிவம்!"



ஒரு முறை மன்ரோவுக்கு கடுமையான ஜுரம் வந்த போது ஸி. ஆர். அவர் வீட்டுக் குச் சென்றார். மன்ரோ ஊட்டியில் சில காலம் தங்கி இளைப்பாற ஏற்பாடு செய்தார். ஸி. ஆர். பதவி ஏற்றதும் பிராக்கன்பரிக்குக் கதர்த் துணி ஒன்றைப் பரிசாக அளித்தார். காந்தியப்போராட்டத்தின் சின்னமான இந்தக் கதர் துணியில் பிராக்கன்பரி ஒரு ஸூட் தைத்துப் போட்டுக் கொண்டார். இவ் விஷ யம் பஸ்களிலும் டிராம்களிலும், சிற்றுண்டி சாலைகளிலும் மக்களின் கற்பனையையும் ஹாஸ்ய உணர்வையும் தூண்டியது. எங்கும் இதே பேச்சுத்தான். இதை அந் நாளைய சஞ் சிகை ஒன்று குறிப்பிடுகிறது.

செக்ரடேரியட்டில் முந்தைய முதன் மந் திரியின் கீழ் பணியாற்றிய பி. வி. கிருஷ்ணை யாவை ஸி. ஆர். தம் உதவியாளராய் தக்க வைத்துக் கொண்டார். ஸி. ஆர். முதன் முறையாகக் கோட்டைக்கு வந்த நாளை நினைவு கூர்கிறார் கிருஷ்ணையா:

"தலைமை செயலர் சென்றதும் பி. எம். என்னை உள்ளே அழைத்தார். 'எனக்காக வேலை செய்பவர்களின் பட்டியல் ஒன்று வேண்டும்' என்றார். அவருடைய சொற் பிரயோகம் எனக்கு ஆச்சரியம் அளித் தது. 'எனக்குக் கீழ் வேலை செய்யும்' என்று சொல்லக் கேட்டே பழகியிருந் தேன். நான் உடனே பட்டியல் தயார் செய்து கொடுத்தேன். அதைப் படித்து விட்டு 'ஆறுமுகம்' என்று அவர் அழைத் தார். பகட்டான சீருடையணிந்த தலைமை ஏவலர் (Peon) ஆறுமுகம் தம் பெயர் சொல்லி அழைக்கப்பட்டவுடன் வியப் புடன் ஏறிட்டுப் பார்த்தார். எங்கள் முன்னாள் முதலாளிகள் எங்களைப் பெயர் சொல்லியே அழைத்ததில்லை. கிளார்க், பியூன் போன்ற பொதுப் பெயர்களையே தாங்கி வந்தோம் நாங்கள். எங்கள்

பெயர்களை உச்சரிப்பது ஒன்றும் அவர்களுக்குக் கடினம் அல்ல. இருந்தாலும் அவர்கள் எங்களை ஒரு பெரிய இயந்திரத்தின் பகுதியாகவே எண்ணினார்களேயொழிய தனி மனிதர்களாக அல்ல.''

ஸி. ஆரின் அயராத உழைப்பு நிர்வாகத்தினரைக் கவர்ந்தது. ஸி. ஆர். உழைத்து ஓய்ந்து போய் விடாமல் இருக்க வேண்டுமே என்று லின்லித் கோ கவர்னரிடம் கவலை தெரிவித்தார். மகாத்மாவோ ''ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டால் உலகம் தலைகீழாய்ப் போய் விடாது'' என்று ஸி. ஆரிடமும் ''உங்கள் அப்பாவை சிரம பரிகாரம் செய்து கொள்ளச் சொல்லுங்கள்'' என்று ஸி. ஆரின் குழந்தைகளிடமும் கூறினார். எப்போதும் போல் ஸி. ஆர். எதிர்க் கணை தொடுத்தார். மகாத்மாவுக்கும் தான் ஓய்வுத் தேவை என்று ஒரு கட்டாய தினசரி ஓய்வுத் திட்டத்தை வகுத்தளித்தார்! அதே நேரத்தில் தன் உடல் நிலை மோசமாக இருப்பதை ஒப்புக் கொள்ளவும் செய்தார் ஸி. ஆர். ''என் விரல்கள் நடுங்குகின்றன. சோர்வுடன், இரவு படுக்கும் போது ஜுரம் அடிப்பது போன்ற ஆயாசத்துடன் படுக்கிறேன்'' என்று எழுதினார். இருப்பினும் ஓய்வு என்பது ''சிந்தித்தும் பார்க்க முடியாததாய்'' இருந்தது.

பொதுவாகக் காண முடியாத அளவுக்கு அதிகமாக நேர்மைக் குணம் ஸி. ஆரிடம் இருந்தது. வேலைக்கு சிபாரிசு தேடி அவரிடம் வந்தவர்கள் எல்லோரும் ஒருமுகமாய் ''முடியாது'' என்ற தாட்சண்யமற்ற பதிலையே சந்திக்க வேண்டியிருந்தது. அப்படி வந்தவர்களுள் ஒருவரைப் பார்த்து ஸி. ஆர். கேட்ட முதல் கேள்வி. ''உன் பிள்ளைகளுக்கு வேலைக் கேட்டு வந்திருக்கிறாயா?'' என்பதே! ''இல்லை! இல்லை! சும்மாத்தான் உன்னைப் பார்த்துப் போக வந்தேன்!'' என்று பொய் சொன்னார் அந்த உறவினர். பங்களூருக்குத் திரும்பிப் போய்த் தம் குடும்பத்தாரிடம் சொன்னார்: ''வாயைத் திறக்காமல் திரும்பி வந்து விட்டேன்!''

சமயோஜிதம் நிறையவே தேவைப்பட்டது. மந்திரி சபைக் கூட்டங்களுக்குக் கவர்னர் தலைமை தாங்க வேண்டும் என்பது சட்டம். ஆனால் கவர்னரின் தலைமையில் எடுக்கப்படும் முடிவுகள் காங்கிரஸ் மந்திரி சபை சுதந்திரமாக எடுத்த முடிவுகளாகத் தோன்றுமா? மக்கள் என்ன நினைப்பார்கள்? சீக்கிரமே ஒரு நல்ல யோசனை தோன்றியது. உண்மையான மந்திரி சபைக் கூட்டம் பிரதம மந்திரியின் அலுவலகத்தில் காலை பத்து மணிக்கு நடைபெறும். சம்பிரதாயக் கூட்டம் பதினொரு மணிக்கு எர்ஸ்கைன் தலைமையில் நடைபெறும். பின்னது ஐந்து அல்லது பத்து நிமிடங்களுக்கு மேல் நீடிக்காது!

நீல் (நீலன்) சிலை விவகாரம் தான், ஸி. ஆர் ஒரு நூதன சிந்தனையாளர் எனப் புகழ் பெற அஸ்திவாரமிட்டது. 1857 எழுச்சியின் போது, ஜெனரல் நீல் பல சாதனைகளைப் புரிந்த ஹீரோவாக ஆங்கிலேய ஆட்சியாளரால் கருதப்பட்டார். இதனை மவுண்ட் ரோடில் இருந்த அவர் சிலை பிரகடனப் படுத்தியது. பொது மக்கள் அச் சிலையைக் கட்டி இழுத்து உடைத்து விடும் உத்வேகத்தில் இருந்தனர். சென்னை மாநகராட்சி, சிலை, போக்குவரத்தைத் தடை செய்வதாக ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியிருந்தது. இந்த சாணக்கியத்தை முறியடிக்கும் விதமாக, ஸி. ஆருக்கு முன்னதாக ஆண்ட இடைக்கால அரசு சிலையைச் சுற்றி ஒரு ரவுண்டானா அமைத்து போக்குவரத்தைச் சீர் செய்து அந்த வாதத்துக்கே இடமில்லாமல் செய்து விட்டது. ஸி. ஆர். சிலையை அகற்ற உத்தரவிட்ட கையோடு, அதை அரசாங்க அரும் பொருள் காட்சியகத்தில் பத்திரப் படுத்த வேண்டும் என்றும் ஆணையிட்டார். இவ்வுத்தரவு ஒரு நவம்பர் மாத இரவில் மையிருட்டில் நிறைவேற்றப்பட்டது. பிரதம மந்திரியின் துணைக் காரியதரிசி பொறுப்பை மன்ரோவுக்குப் பிறகு ஏற்றிருந்தவர் பி. டபிள்யூ. டே. இவர், ஸி. ஆரை ''தினவெடுத்த பேனாவைப் பயன்படுத்தும் நிர்வாகி'' என்று வர்ணிக்கிறார். ''எழுதியதைத் திருத்தி, சீர்படுத்தி அதன் பொருளை மாற்றாமல் அதன் இலக்கியத் தரத்தை உயர்த்தும் பழக்கமுடையவர்''. அவர்களின் இரண்டு வருட உறவில் இரண்டே முறைகள் தான் டே எழுதியவை திருத்தமின்றி ஸி. ஆரால் ஏற்கப்பட்டன! கோப்புகளில் தமக்கே உரிய பாணியில் அபிப்ராயங்களையும், உத்தரவுகளையும் குறித்து வைக்கும் வழக்கம் ஸி. ஆரிடம் இருந்தது. நீல் விவகாரம் பற்றிய குறிப்பு அவற்றுள் ஒன்று:

"இரண்டு மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன. நாம் அறிவுள்ளவர்களாய், உணர்ச்சி வசப்படாமல் தீர்மானம் செய்ய வேண்டும். முதலாவது — சரித்திரப் புகழ் வாய்ந்த சின்னங்களிடம் பண்புள்ள மனிதன் தன் விருப்பு வெறுப்புக்களைக் காட்டக் கூடாது; அவை மாறும் அரசியல் நிலைமையால் தாக்குதலுக்கு உள்ளாகக் கூடாது. மற்றொன்று — எந்த விஷயம் உணர்ச்சிகளைக் கிளறி விடுகிறதோ அதற்குப் பொது விடத்தில் கவனமீர்க்கும் வண்ணம் சின்னம் அமைத்து, அந்த எரிச்சலை வளர்த்து விடக் கூடாது. ஒரு சரித்திரப் புகழ் வாய்ந்த சின்னத்தைப் பேண ஒன்றுக்கு மேற்பட்ட வழிகள் உள்ளன. அறிஞர்கள் எப்போதுமே சாமானிய மக்களின் உணர்ச்சிகளையும் மனத்தில் கொண்டு செயல்பட வேண்டும். ஆக மொத்தம் 1861 ஆம் வருடம் நிறுவப்பட்ட இந்த நினைவுச் சின்னத்தை இரு வழிகளில் பாதுகாக்கலாம். அந்த இரண்டு வழிகளில் சிறந்த வழியை இன்று நாம் கடை பிடிப்பது தவறாகாது. மாறாக அதுவே புத்திசாலித்தனமாகும்."

(தொடரும்)

தமிழாக்கம் : **சீதா ரவி**

# மௌனப் புயல்

சென்றவாரம்:

'அமிர்தஸர் பொற்கோவிலில் ராணுவம் புகுந்துவிட்டது' என்ற டி.வி. அறிவிப்பைப் பற்றி எண்ணியவாறே நிம்மதியற்ற இரவுக்குப் பின் விழித்தெழுகிறாள் ரஞ்சனி. 'மன்மோஹன் ஸிங்கை இச்செய்தி எப்படி பாதித்திருக்கும்' என்று யோசிக்கிறாள். அவனுக்கு போன் செய்து அவன் கிடைக்காததால் 'இச்சம்பவம் சம்பந்தப்பட்டவர்களை எப்படிப் பாதித்திருக்கிறது' என்று கட்டுரை எழுதத் தீர்மானிக்கிறாள்.

மத்திய அரசாங்க ஊழியரான ரஞ்சனியின் அப்பா எஜமான விசுவாசத்தால் அரசின் எந்தச் செயலையும் அங்கீகரிப்பவர். ரஞ்சனியும் அவள் சகோதரன் ரமேஷும் இதை எதிர்ப்பவர்கள். ரமேஷுக்கும் அவன் அப்பாவுக்குமிடையே முந்தைய நாள் சம்பவத்தைக் குறித்துப் பலத்த வாக்குவாதம். அதைக் கேட்கவும், காணவும் சகியாமல் அவன் அம்மா மிகவும் கவலைப்படுகிறாள்.

இதற்கிடையே ரஞ்சனி வழக்கமாக எழுதி வரும் பத்திரிகையின் உதவி ஆசிரியர் ராதாகிருஷ்ணன் மாலை ஏழரை மணிக்குப் பஞ்சாபி எழுத்தாளர் கர்தார் ஸிங்கைப் பேட்டிக் காணச் சொல்கிறார்.

வழக்கம் போல் ஸ்பானிஷ் வகுப்புக்குத் தோழி ரூமாவுடன் செல்ல ரூமா வீட்டிற்குப் போகிறாள் ரஞ்சனி. ரூமாவின் குடும்பத்தார் சமயப் பிரக்ஞை மிக்க சீக்கியர்கள். ரூமா தன் காதலனைக் கூட சீக்கியனாகத் தேர்ந்தெடுத்திருப்பவள். அன்று ரூமா வீட்டில் அசாதாரண அமைதி. ரூமாவின் அப்பா மிகவும் வருந்தினாலும் தன்னைச் சுதாரித்துக் கொண்டு விடுகிறார். ரூமாவின் தாத்தா மிகவும் பாதிக்கப் பட்டிருப்பதாக அறிகிறாள். தோழிகள் இருவரும் ஸ்பானிஷ் வகுப்புக்குப் போகிறார்கள்.

## 2

பதினைந்து நிமிஷங்கள் முன்பு வரை பேச்சும் அட்டகாசச் சிரிப்புமாக இருந்த சாப்பாட்டு மேஜையில் சட்டென்று ஒரு மௌனம் படர்ந்திருந்தது. மன்மோஹன் ஸிங்கும் அவனுடைய தோழன் காப்டன் ஜொகிந்தர்ஸிங்பேதியும் சாப்பிடுவதை நிறுத்தி, கையிலிருந்த ஸ்பூனைக் கூடக் கீழே வைக்க மறந்தவர்களாய் அறையின் ஒரு ஓரமாய் இருந்த டி.வி.யைப் பார்த்தார்கள். அந்த முக்கிய அறிவிப்பில் வந்த தெளிவில்லாத வார்த்தைகளின் ஊடே தொக்கியிருந்த அர்த்தங்களைத் துழாவும் தீவிரத்துடன் மன்மோஹன் நாற்காலியின் முனையில் அமர்ந்தான்.

"மிகக் கனத்துப் போன இதயத்துடன் சொல்கிறோம். தேசத்துக்கு விரோதமான, பாதகமான செயல்களை அடக்கியே ஆக வேண்டிய தருணத்தில் இருக்கிறோம். நாம் ஒரு நிர்ப்பந்தத்தில் இருக்கிறோம்..."

முக்கிய அறிவிப்பு எதிர்பாராமல் வந்த வேகத்தோடு முடிந்தும் போயிற்று. அறிவிப்பாளர் ஸாதனா ஸ்ரீவத்ஸவாவின் முகம் தெரிந்தது வழக்கமான பிரஸன்னம் இல்லாமல்.

"வொய் ஆல் திஸ் டிராமா, டாமிட்!"

மன்மோஹன் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான். பேதியின் தம்பி பின்டு — இன்னும் பதினாறு வயது முடியவில்லை. மீசை முளைக்கவில்லை. முகத்திலும், பார்வையிலும் ஒரு தீவிரம் தெரிந்தது.

"ஷட் அப் பின்டு!" என்று பேதி அதட்டினான்.

"நீ சாப்பிட்டாச்சுன்னா எழுந்திருந்து உன் ரூமிற்குப் போ!"

பின்டுவின் கன்னங்களில் அதிக சிவப்பேறிற்று.

"நான் ஒண்ணும் இன்னும் குழந்தை இல்லே!"

கோபத்துடன் முணுமுணுத்தபடி அவன் செல்வதைக் கண்டு பேதியின் அம்மா எழுந்தாள் அவனை சமாதானப்படுத்த.

சமையல்காரன் கொண்டு வந்து வைத்த பரோட்டாவை மௌனமாகத் தங்களது ப்ளேட்டுக்களில் பரிமாறிய பேதியிடம் மன்மோஹன் மெல்லிய குரலில் கேட்டான்.

"இந்த அறிவிப்பைப் பத்தி என்ன நினைக்கறே? இஸ் இட் ஸீரியஸ்?"

"வெரி ஸீரியஸ்!" என்றான் பேதி.

"ஏதோ ரொம்பப் பெரிய விஷமம் நடந்திருக்கணும் இல்லாவிட்டால் இந்த முக்கிய அறிவிப்புக்கு அர்த்தமில்லே."

இருவரும் சற்றுநேரம் என்ன செய்கிறோம் என்கிற உணர்வே இல்லாதவர்கள் போல் தங்கள் யோசனையுள் ஆழ்ந்தபடி மௌனமாகச் சாப்பிட்டார்கள். தங்களுக்குள் எழுந்த சந்தேகத்தையும் பயத்தையும் வெளியில் வார்த்தைகளில் வடிக்க இதுவரை ஏற்படாத தயக்கம் ஏற்படுவதை மன்மோஹன் உணர்ந்தான். திடீரென்று இந்தத் தயக்கமும் மௌனமும் பாரமாகிப் போனாற்போல் மூச்சை முட்டிற்று.

வாஸந்தி



"கோவிலுக்குள் ராணுவம் போயிருக்கும்னு நினைக்கிறியா ஜொகிந்தர்?"

பேதி தோளைக் குலுக்கினான்.

"போயிருக்கலாம்."

"ஐ ஹோப் நாட்!" என்றான் மன்மோஹன் மெல்லிய கலவரத்துடன்.

இருவரும் சாப்பாட்டு மேஜையிலிருந்து எழுந்து கையைக் கழுவிக் கொண்டு வரவேற்பறையை ஒட்டினாற் போல் இருந்த திறந்த வராந்தாவுக்கு வந்தார்கள்.

"இது எதிர்பார்த்ததுதான் மன்மோஹன்."

"எது?"

"ராணுவத்தை அனுப்பும் யோசனை".

மன்மோஹன் மெல்லிய திகைப்புடன் அவனைப் பார்த்தான்.

"அது ரொம்ப முட்டாள்தனமான யோசனை ஜொகிந்தர்!"

மிகப் பலத்த ஓசையுடன் விமானம் ஒன்று மேலே பறந்தது. அதன் ஓசையில் மன்மோஹனது வார்த்தைகள் அமுங்கித் தேய்ந்தன.

ஓசை ஓய்கிற வரை காத்திருந்து பேதி சொன்னான்.

"முட்டாள்தனமான பிரச்னைகளுக்கு முட்டாள்தனமான அணுகு முறைகள் தான் இருக்கும் 'யார்'!"

"ஆனால் இது!"

மன்மோஹன் சில விநாடிகள் வார்த்தைகள் வராமல் தடுமாறினான்.

"யார், உனக்கும் எனக்கும் நம்ம ஜனங்களைப் பற்றித் தெரியும்! அவர்களுடைய ஸெண்டிமெண்ட்ஸைப் பத்தித் தெரியும். இதோட விளைவுகள் எப்படியிருக்கும்னு வெளிப் பேருக்குப் புரியாது ஜொகிந்தர்!"

"நீயும் நானும் பதற்றப்பட்டுப் பிரயோஜனமில்லை மன்மோஹன். வெளிப் பேருக்குப் புரியாம இருக்கலாம். ஆனா அரசாங்கத்துக்கு நன்றாய்த் தெரியும். அரசியல்லே சில தியாகங்கள், பலிகள் தவிர்க்க முடியாதவை. பெரிய மீனைப் பிடிக்கணும்னு சின்ன மீனை பலி கொடுத்துத்தான்

ஆகணும்.

மன்மோஹன் தீவிரமாகத் தலையசைத்தான்.

"உன் ஊகம் தப்பாய் இருக்கணுமே என்றிருக்கு ஜொகிந்தர். என்னையே சங்கடப்படுத்துகிறது. உனக்குத் தெரியும், நான் மதசார்பில்லாதவன், நம்பிக்கை இல்லாதவன். இருந்தும் எனக்கு என்னவோ செய்கிறது... அது பயமா, கவலையா?"

"இரண்டும்தான். இதோட விளைவுகளைப் பத்தின பயம், கவலே."

"அப்ஸொல்யூட்லி ஸூயிஸைடல் யார்!"

பேதி வெகு நேரம் எதுவும் பேசாமல் இருண்ட வானத்தைப் பார்த்தபடி நின்றான். பேசுவதற்கோ, விவாதிப்பதற்கோ இனிமேல் வார்த்தைகளே கிடையாது என்கிற ஆயாசத்துடன் மன்மோஹன் எழுந்தான்.

"நான் கிளம்பறேன் ஜொகிந்தர். பத்து மணிச் செய்தியிலே ஏதானும் வரதான்னு பார்க்கிறேன்."

"என்னுடைய ஊகம் சரியானதாக இருக்கும். காலையில் ரகசியம் அம்பலமாகிவிடும் பார்!"

தெருவில் இறங்கி பஸ் ஸ்டாப்பை நோக்கி நடக்கும் போது பேதி இந்த விஷயத்தை அதிகம் பட்டுக்கொள்ளாமல் பேசின மாதிரி தோன்றிற்று. ராணுவத்தில் இருப்பதும், இந்த விஷயத்தைப் பற்றிய முன்னறிவு இருந்ததும் அதற்குக் காரணமாக இருக்கலாம் என்று மன்மோஹன் நினைத்துக் கொண்டான்.

"முட்டாள்தனமான பிரச்னைகளுக்கு முட்டாள்தனமான அணுகு முறைகள்தான் இருக்கும்...!"

ஜனசந்தடியேயில்லாத தெருவைக் கடந்து தனியாக பஸ் ஸ்டாப்பில் நிற்கும் போது அடி வயிற்றிலிருந்து ஒரு மெல்லிய சீற்றம் சுருண்டு எழுந்தது.

பஞ்சாபைப் பொருத்தவரை எல்லாப் பிரச்னைகளும் முட்டாள் தனமான பிரச்னைகள். எளிமையாக ஆரம்பித்த கோரிக்கைகள் அசட்டுப் பிடிவாதத்தால், அரசியல் பிரச்னைகளாக்கப்பட்டு, முட்டாள் தன பகிரங்கப் பேச்சால் சிக்கலாகி, மதப் போர்வை 'போர்த்தப்பட்டு — நிஜமாகவே ஒவ்வொரு சிக்கலும் மதம் பிடித்தவனாய்...

அவன் செல்ல வேண்டிய பஸ் வந்தது. அவன் கனவில் நடப்பவனைப் போல் ஏறிக் கொண்டான்.

பஸ்ஸில் அதிகப் பயணிகள் இல்லை — இருந்தவர்களும் ஒரு களைத்துப் போன மயக்கத்தில் இருந்தார்கள்.

இவர்களுக்கெல்லாம் இன்றைய முக்கிய அறிவிப்புத் தெரிந்திருக்காது. இவர்களில் அநேகம் பேர் வீட்டிற்குச் சென்றதும் ரேடியோவைத் திருப்பக் கூடத் தெம்பில்லாத மந்தத்துடன் சாப்பிட்டு நேரே படுக்கைக்குச் செல்பவர்கள். வீட்டில் இவர்களுடைய மனைவிமார்கள் சித்ரஹாரை மட்டும் பார்த்துப் படக்கென்று டி.வி.யை மூடுபவர்கள்... நாளைக்குக் காலைப் பேப்பரைப் பார்த்து விட்டு நன்றாக வேண்டும் இந்த ஸர்தார்ஜிகளுக்கு என்று சொல்லப் போகிறவர்கள் — பஸ்ஸில், கான்டீனில், அலுவலகத்தில் தங்கள் எண்ணத்தைப் பரப்பப் போகிறவர்கள்.

பஸ்ஸின் முன் ஸீட்டில் ஒரு ஸர்தார்ஜி இளைஞன், தூங்குகிற பிள்ளையைத் தோளில் சாய்த்தபடி உட்கார்ந்திருந்தான், அவன் பக்கத்தில் அவன் மனைவியாக இருக்க வேண்டும். மெல்லிய ஷிபான் புடவையில் உடம்பின் பரிமாணங்கள் மிகையாகத் தெரிவதின் பிரக்ஞையில்லாத அலட்சியத்துடன் உட்கார்ந்திருந்தாள். மாலையில் பார்த்த சினிமாக் களைப்பில், அலைந்த அலைச்சலில்,



நடையோரச் சோலே பட்டுரே உள்ளே சென்றிருந்த திருப்தியில் முகத்தின் அதீத மான மேக்கப்பை மீறி மெல்லிய சோர்வு தெரிந்தது.

வாழ்வின் விளிம்பிலேயே நிற்கும் இவர்களுக்குத் தங்களைச் சாராத எந்த விஷயமும் ஆழமாக பாதிக்கப் போவதில்லை. ஆனால் இதே ஸர்தார்ஜி நாளைக்குப் பேப்பரைப் பார்த்ததும் ஆளே மாறி விடுவான். அவமானப் படுத்தப்பட்ட மாதிரி பொங்கப் போகிறான். பேதத்தைப் பற்றியே நினைக் காதவன் நினைக்கப் போகிறான்...

மனைவிமார்களும், வீட்டு அமைப்பும், வெளி வாழ்க்கை முறையும் மேற்கத்திய நாகரீகத்தின் பிரதிபலிப்பாய் இருப்பதை இயல்பாய் ஏற்றுக் கொண்டிருக்கும் இவனது புற வாழ்வுக்கும், இவனது அக வாழ்வுக்கும் சம்பந்தமேயில்லை என்பது இவனுக்குத்தான் புரியும். உடம்பெல்லாம் தெரிகிற மாதிரி உடையும் ரத்தச் சிவப்பில் உதட்டுச் சாயமுமாய் இருக்கும் இவன் மனைவி, குரு கிரந்த ஸாஹப் வைத்திருக்கும் அறைக்குச் செல்லுமுன் பக்தி சிரத்தையாக துப்பட்டாவினால் தலையையும், மார்பையும் போர்த்திச் செருப்பில்லாமல் உள்ளே நுழைந்து நமஸ்கரிப்பாள் — நாளைக் காலை விஷயம் தெரிந்ததும் துக்க சேதி கேட்டது போல் கலங்கப் போகிறாள்...

இந்த விநோதமான ஸைக்காலஜி யாருக்கு விளங்கும்?

தானும் அந்த சர்தார்ஜியும் அந்த பஸ்ஸில் அன்னியமாகிப் போனாற் போல் மன்மோஹன் ஸிங்கிற்குத் தோன்றிற்று. சர்தார்ஜியின் தோளில் தூக்கத்தில் துவண்டிருந்த அந்த இளக முகத்தையும் தலை உச்சியில் சின்னக் கைக்குட்டையால் முடிந்திருந்த வெட்டப் படாத முடியையும் பார்க்கையில் அபரிதமான பச்சாதாபம் எழுந்தது.

"அந்த முட்டாள் சர்தார்ஜிகளை இப்படித்தான் அடக்கியாகணும். வேற வழியே யில்லை..."

அவனது கவனத்தைக் கலைக்க வேண்டும் என்ற எண்ணத்துடனேயே பேசிய மாதிரி இரண்டு பயணிகள் உரத்த குரலில் பேசினார்கள்.

"அந்த பிந்திரன்வாலே பண்ண அக்ரமம் சும்மாவா? எத்தனை ஹிந்துக்களை கொலை செஞ்சிருக்கான்! பஸ்ஸை நிறுத்தி ஹிந்துக்களை வெளியிலே இழுத்து சுட்டுத் தள்ளியிருக்கான்!"

"அப்புறம் கோவில்லே உட்கார்ந்துண்டு அட்டகாசம் பண்றான்! அவனுக்கு சர்தார்ஜிகள் எல்லாம் உள் கை. கொலைகாரன், மதத் தலைவனும், எப்படியிருக்கு? இத்தனை நாள் அவனுக்கு இடம் கொடுத்ததே தப்பு!"

"அவன் யாருடைய ஆளு தெரிஞ்சில்லே?"

"உஷ். அந்தப் பழங்கதையெல்லாம் எதுக்கு? அரசாங்கம் நினைச்சது ஒண்ணு. நடந்தது இன்னொண்ணு. தேசத்துரோகின்னு தெரிஞ்சப்புறம் சும்மா இருக்க முடியுமா?"

"எங்களைக் கேட்டியானா, ஒரு சர்தார்ஜியையும் நம்பக் கூடாது."

மன்மோஹன் ஸிங் வெகு கஷ்டப்பட்டுத் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டான். இந்த பஸ்ஸில் அவனையும், தூங்கும் குழந்தையைத் தோளில் சுமந்து தூங்கி வழியும் இன்னொருத்தனையும் தவிர மற்ற எல்லாரும் ஹிந்துக்கள். எண்ணிக்கையின் பலத்திலேயே திமிராகப் பேசும் அந்த இருவரிடம் போய் சண்டை போடுவது, பேசாமல் உட்கார்ந்திருக்கும் மற்றவர்களையும் அவர்கள் பக்கம் சேர்த்து விடும் என்கிற எண்ணத்தில் பேசாமல், காதில் விழாதவனைப் போல் நின்றான்.

அவர்கள் பிந்திரன்வாலேயைப் பற்றிப் பாமரத்தனமாகப் பேசுவது எரிச்சல் ஏற்படுத்தியது. பாமரர்களுக்கு இப்படிப்பட்ட எண்ணத்தை உருவாக்கிய பத்திரிகைக்காரர்களின் மீது கோபம் வந்தது. பிந்திரன்வாலேயின் பிரவேசம் பஞ்சாபின் துர்பாக்கியம் என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். அந்த வெறியன் ஹிந்துக்களை மட்டும் வெறுக்கவில்லை — முற்போக்குச் சிந்தனையுள்ள எல்லா சீக்கியர்களையும் வெறுத்தான். அவன் ஹிந்துக்களைக் கொன்றதைவிட சீக்கியர்களைக் கொன்றிருப்பது அதிகம் என்று இந்த வம்பர்களுக்குத் தெரியாது.

எனக்குள் இப்பொழுது கொஞ்ச நேரமாக இருக்கும் பயம் இவர்களுக்குப் புரியாது. கோவிலுக்குள் ராணுவம் புகுந்திருந்தால் கோவிலின் பவித்திரம் போய் விடும் என்று இது சாரி நாஸ்திகனான நான் பயப்படவில்லை. ஆனால் பிந்தரன்வாலே தப்பித்து விட்டானானால் அவனுடைய ஆதிக்கம் அதிகரிக்கும். முற்போக்குச் சிந்தனைகளுக்கு இடமே இல்லாமல் போகும்...

தப்பிக்காமல் இறந்து போனால், சீக்கியர்கள் அவனை தெய்வமாக்கி விடுவார்கள். அவனது பிற்போக்கு வழிகளை ஆராதிப்பார்கள். பழிக்குப் பழி வாங்க...

மன்மோஹன் ஸிங் தன்னைச் சட்டென்று

நேபாளக் குமரி

நேபாளத்தில் நேவாரி சமூகத்தில் சிறு வயதில் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து 'வாழும் கடவுளாக' வழிபட்டு வருகிறார்கள். இவளுக்குப் பெயர் 'குமாரி' அதாவது 'கன்னித் தெய்வம்.'

தனி ஜாகை; அநாவசியமாக வெளியில் வரக் கூடாது; குறிப்பிட்ட நேரம் தவிர இவளைப் புகைப்படம் எடுக்கவும் அனுமதிப்பதில்லை. அவளது நெற்றியில் மூன்றாவது கண் ஒன்று எப்போதும் வரையப் பட்டிருக்கும். செப்டம்பர்—அக்டோபர் மாதங்களில் நடைபெறும் விசேஷத் திருவிழாவின் போது இவளிடம் ஆசி பெற நேபாள மன்னர் உள்பட



ஆயிரக்கணக்கான பக்தர்கள் வருவர். விஷ்ணுவின் மறு அவதாரமாகக் கருதி இவளை வணங்குகிறார்கள்

உடலிலிருந்து உதிரம் வெளிப்பட்டால் இவள் தூய்மை அழிந்து விடுவதாகக் கருதுகிறார்கள். இதற்காகவே இவளுக்கு எந்தவித விபத்தோ — காயமோ ஏற்படாமல் பாதுகாக்கிறார்கள். தப்பித் தவறி காயம் பட்டால் இவர் கடவுள் தகுதியை இழந்து புதிய குமாரி தேர்ந்தெடுக்கப்படுவார். பருவம் அடையும் வரைதான் இவளைக் கடவுளாக வழிபடுவார்கள்.

பருவமடைந்ததும் தங்கள் குடும்பத்தினருடன் பழையபடி சேர்ந்து கொள்ளலாம். ஆனால் அது முதல் இவர்களுக்குப் பிரச்னைகளே ஆரம்பமாகிறது. இந்நாள் வரை வெளி உலகத் தொடர்பின்றி சொகுசாக வாழ்ந்ததால் இப்போது சிரமமான குடும்ப வாழ்க்கையோடு ஒன்றிப் போக முடிவதில்லை. யாரும் இவர்களை மணந்து கொள்ள முன் வருவதில்லை. இவளை மணந்து கொள்பவன் சீக்கிரம் இறந்து விடுவான் என்ற மூட நம்பிக்கைதான் காரணம்!

ஆதாரம்: டெலிகிராஃப்
தகவல்: அ. குமார்

கட்டுப் படுத்திக் கொண்டான். நான் எதற்காக இத்தனை உணர்ச்சிவசப் படுகிறேன் என்று கவலைப்பட்டான்.

வம்பர்கள் இன்னும் சுவாரஸ்யமாக பஞ்சாப் அரசியலை ஆராய்ந்து கொண்டிருந்தார்கள். அவன் வாயே திறக்காமல் இறங்கும் வழிக்கு நடந்து சென்று நின்று கொண்டான்.

''அந்த சர்தார்ஜி வாயைத் திறந்தானு பார்த்தியா?'' என்றும் பேச்சுக் கேட்டது.

''அவனுக்குத் திறக்க' இனிமேல் ஏது வாய்?''

நீள ஓடிய சீரான தெருக்களையும் இருமருங்கிலும் இருந்த இருண்ட மரங்களையும் அவன் ஆராய்ந்தான். டி. வி. ஆங்கிலச் செய்திக்குள் வீட்டில் இருக்க முடியுமா என்று கணக்குப் போட்டான்.

அவன் வீட்டை அடைந்த போது தூக்க கலக்கத்துடன் வேலைக்காரன் கதவைத் திறந்தான். ஸாஹப்பும், மேம்ஸாஹப்பும் தூங்கப் போய்விட்டார்கள் என்றான்.

அவர்கள் தூக்கத்தைக் கெடுக்காத ஒலியில் டி. வி. யை முடுக்கி மன்மோஹன் செய்தியைக் கேட்டான். விவரம் ஏதும் இல்லை. மெல்லிய நிம்மதி ஏற்பட்டது. கூடவே இது என்ன பைத்தியக்காரத்தனம் என்று தோன்றிற்று. நூறாயிரம் யோசனைகளும் கவலைகளும் படுக்கையில் சாய்ந்ததும் தூக்கத்தில் மீண்டும் குடைந்தன. மூடிய கண்களுள் கேள்விகள் ...

அகாலிதல்காரர்கள் மெதப்பாக நடந்தார்கள். எங்கள் கோரிக்கைகளை ஒத்துக் கொண்டால்தான் எந்தப் பேச்சுக்கும் வருவோம் என்று பிடிவாதம் பிடித்தார்கள். நிபந்தனை இல்லாமல் பேச வந்தால் தான் பேச முடியும் என்றார் பிரதமர். 'பிந்திரன் வாலே, இவர்களுக்கு எதிராக நீ நின்றால் நான் கொஞ்சம் இளைப்பாறுவேன்' என்றார். 'நான் பார்த்துக் கொள்கிறேன். கவலையை விடு' என்றார் பிந்திரன்வாலே. 'ஆனால் நீ கொஞ்சம் கண்ணையும் காதையும் மூடிக் கொள்'.

பிரதமர் கண்ணைத் திறந்த சமயத்தில் திடுக்கிட்டார். பிந்திரன்வாலேயின் துப்பாக்கி பிரதமரைக் குறி பார்த்திருந்தது. ...''இவனை அடக்காமல் எப்படியிருப்பது? ஹம் மஜ்பூர் ஹைன்!'

தூக்கி வாரிப் போட்டுக் காலையில் மன்மோஹன் கண் விழித்தபோது விடிந்து நிறைய நேரம் ஆகியிருந்தது. அவனுடைய அப்பாவும் அம்மாவும் இருந்த நிலையைப் பார்த்து அவன் பேப்பரைக் கையில் எடுக்கு முன் விஷயத்தைப் புரிந்து கொண்டான். அவர்கள் அவனிடம் தங்களது துக்கத்தையோ எண்ணங்களையோ பகிரங்கமாக வெளியிட மாட்டார்கள் என்கிற உணர்வு இன்றைக்கு அவனுள் மெல்லிய வருத்தத்தை ஏற்படுத்திற்று. அவனது நாஸ்திகத்தையும் இடதுசாரிக் கொள்கைகளையும் கண்டு அதிர்ந்து என்றைக்கோ அவர்கள் அறிவார்த்தமாக விலகிப் போயிருந்தார்கள்.

வீட்டில் இருப்புக் கொள்ளாமல் அவன் சிக்கிய நண்பர்களைத் தவிர்த்து எங்கெல்லாமோ சுற்றினான். தில்லி நகரம் முழுவதும் அரசின் செயலை அங்கீகரித்து விட்டது புரிந்தது. அவனுக்கு திடீரென்று ரஞ்சனியின் நினைவு வந்தது. இத்தனை நேரம் அவளை நினைக்காமல் எப்படியிருந்தோம் என்று ஆச்சரியமேற்பட்டது.

மாலையில் அவள் வீட்டிற்கு டெலிஃபோன் செய்த போது அவள் தம்பி பதில் சொன்னான்.

அவள் பஞ்சாபி எழுத்தாளர் கர்தார் ஸிங்கை பேட்டிக் காண சென்றிருப்பதாக.

''ஓ காட்!'' என்றான் மன்மோஹன் அதிர்ந்து. ''அவன் ஒரு ஃப்ராட், ஒரு போக்கிரி! அவனைப் போய் எதற்கு...?''

''வெல் அது எடிட்டருடைய விருப்பம். அவளுடையது இல்லை.''

''டாம் தி எடிட்டர்!''

(தொடரும்)



# யாரால் சொல்ல முடியும்

இரா. சோமசுந்தரம்

எத்தனை விடியல்கள்! தெருவாசலுக்கு நீர் தெளிக்கத் துவங்கின நாள் முதலாய் அம்மா பார்த்து வருகிறாள். அம்மாவுக்கு இன்னமும் பொழுது விடிவது ஒரு ஆச்சரியம் தான். பொழுது விடிவது தான் எத்தனை மாயமானது. கண்ணெதிரிலேயே, ஆனாலும் கண்ணுக்குத் தெரியாமலேயே விடிந்து விடுகிறது. இப்படித் திரும்பி உள்ளே பதில் சொல்லிவிட்டுத் திரும்பி பார்த்தால் பொழுது விடிந்து கிடக்கிறது.

அம்மாவுக்கு தன் மகள் சரோ நீர் தெளிக்கும் காட்சியை பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும் போலத்தோன்றுகிறது. இன்னமும் எத்தனை காலம் தான் அவளை ஒவ்வொரு செயலிலும் பார்த்து ரசிக்க முடியும். கல்யாணமானவுடன் யார் வீட்டுக்கோ ஏதோ ஒரு தெருவில் நீர் தெளிப்பாள். கோலம் போடுவாள். இதை எண்ணும் போது அம்மாவுக்கு கண் கலங்குகிறது.

அம்மா உள்ளே வந்தாள்.

விளக்கு எரிகிறது. சரோவின் அப்பா தெரு ஜன்னலண்டை படுத்து தூங்குகிறார். சாதாரணமாக விளக்குபோட்டதும் 'யாரது' என்றபடி விழித்துக் கொண்டு விடுவார். இப்போதும் விழித்துக் கொண்டுதானிருப்பார். நடு இரவில் சிறுநீர் கழிக்க யாரேனும் விளக்கு போட்டாலும் சரி, காலையில் தெரு பெருக்கவானாலும் சரி, எழுந்து விடுபவராயிற்றே! விழிப்புடன் தான் இருப்பார். தன் அழுகையை யாரும் பார்த்து விடாதபடி வெளிச்சத்துக்கு முதுகைக் காட்டிக் கொண்டு படுத்துகிடக்கிறாரோ என்னமோ..

இந்த பையன் இப்படி செய்வான் என்று யார் தாம் எதிர் பார்த்திருக்க முடியும்? எப்படியும் அது நடந்து முடிந்த கதை. பெண் பார்க்க போய் வந்த போதே எதிர் வீட்டு சாந்தாமணி சொன்னாள்: 'என்னக்கா'... சம்பந்தம்புடிச்சிருக்கா... எனக்கென்னமோ இது வேண்டாம்னு தோணுதுக்கா. நம்ம புள்ளைக்கென்ன? இது இல்லேன்னா இன்னொரு எடம். இதுங்களும் நல்லதுங்க தான். நா இல்லேன்னு சொல்லல. கொஞ்சம் காசு புரள்ற எடம். நம்ம கைக்கு அடங்கி வராது. நாங்களே எல்லாத்தையும் நடத்தி வைக்கறோம்னு சொல்லிபுட்டு நமக்கு வெலங்கு போட்டாப்பல பண்ணிடுவாங்க...'

அப்போது அது பெரிதாக தோன்றவில்லை. உண்மையில் அம்மா மனசுக்குள் சிரிக்கவே செய்தாள். இப்போது ஒரு குற்ற உணர்ச்சி உறுத்துகிறது.

தனிக் குடித்தனம் போகிறவன் வெளியூர்க்கு மாற்றலாகிப் போகக் கூடாதா! உள்ளூரில் வாழ்ந்து கொண்டு இப்படி பிரிந்து கிடக்க வேண்டுமா? ஊர் உலகம் அவன் கண்ணுக்குத் தோன்றாமல் போனதே... இடித்துச் சொல்ல யாருமே இல்லாமல் போய் விட்டார்களே...

இதற்கெல்லாம் மருமகளை குற்றம் சொல்ல அம்மாவுக்கு மனசில்லை. உறவுகள் அற்றுப் போனது அவள் வருவதற்கு முன்பாகவே இருந்து வருகிறது. அவளைக் காரணம் காட்டி அவன் வெளியே போனான். அவ்வளவுதான்.

அவன் போனதும் அப்பாவின் தெம்பு இற்று விழுந்தது. அம்மா இளைத்துப் போனாள். சரோ சோகம் படிய உலவினாள்.. இப்படி அன்றாடம் பார்க்கும்படி ஒரே ஊரில் பிரிந்து கிடந்து மனசை அலைத்து விடுகிறானே...

சொல்லப் போனால் இப்படிப்பட்ட மருமகள் கிடைப்பது கடினம் தான். அவளுக்கு எல்லோரும் சிநேகிதம். யாரையும் விரோதித்துக் கொண்டதாய் இது வரையில் தகவலில்லை. பிறந்து விளையாடின இடம் மாதிரி

அவள் ஒட்டிக்கொண்டாள். சொந்த ஊரில் இருப்பதை விட நெருக்கமான பெண்கள் இங்கே கிடைத்து விட்டார்கள். இவள் வந்த பின்புதான் சரோ சுறு சுறுப்பானாள். எத்தனையோ கை வேலைகளில் கெட்டிக்காரி யானாள். அதை மறுத்து விட முடியாது. அவள் வந்துதான் இவ்வீட்டில் நிலவிய மதிய நேர தூக்கத்தையே விரட்டியடித்தாள்.

தனிக்குடித்தனம் போன இடத்திலும் அவள் சும்மா இருக்கவில்லை. அங்கும் கல கலப்பாய் பழகுகிறாள். குடும்பத்தை பிரித்து விட்டோமே அல்லது இப்படியாக பிறர் எண்ணுகிறார்களே என்றசின்ன உறுத்தலைக் கூட அவளிடத்தில் பார்க்க முடிவதில்லை. சாதாரணமாக இருக்கிறாள்.

அதுசரி. அவளிடத்தில் ஏன் உறுத்தல் இருக்க வேண்டும்? உறவு அற்றுபோனதற்கு அவள் காரணம் இல்லையே. அப்படியே யானாலும் இதற்கு காரணம் அவள் மட்டும் தானா? கிடையாதே. கடைசியாக விஷயம் அவளிடத்தில் முடிந்தது. அவ்வளவுதான்.

எங்கு எப்போது இது ஆரம்பித்தது?

இதற்கெல்லாம் யாரால் விளக்கம் சொல்ல முடியும்?

இதே பிள்ளை அன்று சின்னவனாக இருந்தான். தாயை விட்டு கொஞ்சமும் பிரியாத வனாக இருந்தான். அம்மா அவனைப் பார்த்து ''பொம்பளையா நீ. போயேன். ஆம்பளை பசங்க இல்ல'' என்று திட்டியிருக்கிறாள். ஆனாலும் அம்மாவின் மனசில் சந்தோஷம் தான் இருந்தது. அது அவனுக்கே புரிந்தது என்றாலும் ஒப்புக்கு நாலு பேர் முன்னால் சொல்லி வைத்தான். பிறகு, வளர்ந்து விட்டான். கடைக்குப் போகும் போது வரும் போது வழியில் சந்திப்பாள். அப்போது பார்த்தும் கூட பேசாமல் போய்விடுவான். அது அம்மாவுக்கு முதலில் அதிர்ச்சியாக வும் வருத்தமாகவும் இருந்தது. அதற்கென்ன செய்வது! அவன் பெரியவனாகிவிடவில்லையா? அப்படியும் அவன் வீட்டுக்கு வந்ததும் கேட்பான். அல்லது அம்மா நேரம் கழித்து வந்தாளென்றால் நுழையும் போதே விசாரிப்பான். அம்மா எங்கே போனாள் எதற்காக என்பதில் ஆர்வம் காட்டினான். பின்னாளில் அதுவும் குறைந்தது. ஆனாலும் முடிந்து விடவில்லை. சாப்பாட்டுத் தட்டை முன் வைத்து சாதம் போடும் போது குனிந்த படி கேட்க ஆரம்பித்தான். அதுவும் காலப் போக்கில் மறைந்து விட்டது. அதை அம்மா மறக்காமல் அடிக்கடி நினைத்துப் பார்க்கிறாள்.

இந்த பிள்ளை எப்படி விலக ஆரம்பித்தான்? இது எந்த தெய்வத்தின் சாபம்? இந்த வழக்கமெல்லாம் எங்கிருந்து துவங்கின? யாரால் சொல்ல முடியும்...

அவனுக்கு சாப்பாடு போட்ட பின்பு தான் தானே சாப்பிட உட்காருவாள். அது அம்மாவின் வழக்கம். அதை அவள் மீறின தில்லை. அப்படிப்பட்ட நேரங்களில் அவன். தான் சாப்பிட்டு இருந்த போதும், கூட்டு பொரியல் எதுவானாலும் தட்டிலிருந்து எடுத்துக் கொள்வான். ''எச்சையடா'' என்று சொல்லி வைப்பாள். ஒப்புக்குத் தான். எத்தனை நாள் அவனை உருட்டி உருட்டி கையில் வைத்துக் கொடுத்திருக் கிறாள்! அப்புறம் அவன் வளர்ந்து போனான்.



## அருள்வாக்கு

பேச்சுக்கிடையே ஏதோ ஒரு தரம் 'சிவ' என்று இரண்டு அக்ஷரத்தைச் சொல்லிவிட்டால் அது ஸமஸ்த பாபத்தையும் போக்கி விடும்.

ஸத்தியங்களுக்கெல்லாம் மேலான ஸத்யமாக ப்ராண த்யாக சமயத்திலே ஸாக்ஷாத் பரதேவதை சொன்னதாக சுகாசாரியான் வாயினால் வந்திருக்கிற வாக்யம் இது.

சிவ சிவ என்று சொல்லாதவன் தீவினையாளன் என்றால் துஷ்கர்மா பண்ணினவன், அதாவது பாபி என்று அர்த்தம். அப்படியானால் சிவ நாமா சொல்லி விட்டால் பாபம் போய் விடும் என்று தானே அர்த்தம்?

தெரிந்தும் தெரியாமலும் எவ்வளவோ பாபம் பண்ணிவிட்டோம். அது தான் மேலே போக முடியாதபடி பெரிசாகத் தடை செய்கிறது. சிவ நாமா சொல்லி விட்டால் அந்தத் தடை போய் விடும். அப்புறம் மோக்ஷ பர்யந்தம் எல்லாம் ஸித்தியாகி விடும்.

நம்முடைய மதத்தில் இத்தனை கர்மாநுஷ்டானம் விதித்திருப்பது பாபம் போகத்தான். 'மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா' என்று தானே எந்தக் கர்மாவுக்கும் முதலில் ஸங்கல்பம் பண்ணுகிறோம். 'துரிதம்' என்றால் பாபம்தான். பக்தி மார்க்கம் பாபத்தைப் போக்கத்தான். பக்தி முதிர்ந்து ப்ரபத்தி (சரணாகதி) ஆகும். பகவான் கீதையைப் பூர்த்தி பண்ணும் போது "சரணாகதி பண்ணு. உன்னை ஸகல பாவங்களிலிருந்தும் விடுவித்து விடுகிறேன். ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று ஸத்யம் பண்ணித் தந்திருக்கிறார்.



**ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

அவனுக்கு சாப்பாடு போடும் நேரத்தில் ஒரு நாள் வெளியே சென்று மூக்கை சிந்தி விட்டு வந்தான். அப்போது அவன் கேட்டான்: "கையை கழுவினாயா?"

அம்மாவுக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது. பின்பு நிதானமாக யோசித்தாள். சரிதான். அதிலென்ன தவறு? விஞ்ஞானம் படிக்கும் பிள்ளைக்கு இதெல்லாம் யோசனைக்கு வருகிறது. இதற்கெல்லாம் தப்பிதம் சொல்ல முடியுமா... ஆனாலும் அம்மாவுக்கு ரொம்ப வருத்தம் தான்.

சின்ன வயதில் அப்பா வீட்டிலிருக்கிறார் என்றால் வெளியில் போக மாட்டான். யாரோடும் விளையாடக் கூட மாட்டான். இது பயம் என்று அர்த்தமில்லை. அவரை நேசித்தான். அவர் மேல் மதிப்பு இருந்தது. பிறகு என்ன நேர்ந்ததோ யாரால் சொல்ல முடியும். அவர் வருகிறார் என்றால் முகம் கடு கடுக்க ஆரம்பித்தது. இரண்டாவது நிமிடம் நடையில் அவன் செருப்பை மாட்டிக் கொண்டு புறப்படும் ஓசை கேட்டது. அவர் இல்லாத சமயங்களில் மட்டுமே அவன் வீட்டில் வசித்தான். யதேச்சையாக அவர் சாப்பிடுவது தெரியாமல் சமையலறையில் நுழைந்து விட்டால் தவலையில் தண்ணீர் மொண்டு குடித்து விட்டு அப்புறம் சாப்பிடுகிறேன் என்று நழுவலானான். அப்போதே இது ஆரம்பித்து விட்டது. இதற்கு இன்று வந்த மருமகள் என்ன செய்வாள்.

மருமகளும் தான் எத்தனை செய்திருக்கிறாள். இந்த வீட்டுக்காக எவ்வளவு பொறுப்பான விஷயங்களுக்கு காரணமாய் இருந்திருக்கிறாள். சொந்த வீடு அடமானத்தில் மூழ்கும் நிலையில் இருந்த போது அவள் தானே தாய் வீடு போய் பத்தாயிரம் வாங்கி வந்து கொடுத்தாள். கடன் தான். ஆனாலும் கேட்காமலேயே தானே செய்தாள்... அது உதவி இல்லையா... சரோ பூப்படைந்த போதும் ஆயிரத்து சில்லறை ரூபாய் கொடுத்து உதவினாளே... இதை அவள் திருப்பிக் கொடு என்று கேட்டதில்லை. கொடுத்ததைப் பிறர்க்கு சொன்னதாக கேள்வியில்லை.

"பண்ண பாவத்துக்குப் பரிகாரம் தேடறா.. குடும்பத்த பிரிச்சாளே அதுக்கு இது கூட செய்யலேன்னா நல்லாயிருக்குமா... நீ ஒண்ணும் புரிசிடாதே" சரோவின் அப்பா வாய்க்கு வந்ததை பேசுகிறார். அம்மா அதையெல்லாம் பொருட்படுத்துவதில்லை. மருமகள் மனதில் நல்ல எண்ணங்கள் இருக்கிறது. அது பொய்யல்ல. அப்படியிருக்க ஏன் போக வேண்டும்? அவர்களுக்கு இங்கு என்னதான் குறை?

ஒரு வேளை சின்னசிறுசுகள் தனிமையை விரும்பியிருக்குமோ! இதற்காகவே அம்மா ஒவ்வொருவரையும் பலமுறை ஏதோ வேலை

சத்தூட்டம்
நிறைந்தது
குதூகலம்
மிகுந்தது!

புதியது!

# ஐஸ்-க்ரீம் சுவை
# காம்ப்ளான்®

அம்மாக்களே! இதோ சத்தூட்டம், சிறுவர்கள் அனுபவிக்கத் துடிக்கும் சுவையில்: நாவூறச் செய்யும் ஐஸ் க்ரீம். அவர்கள், வெப்பத்தினால் சரியாக உணவருந்தாத போது, அவர்களுக்கு அவசியமான போஷாக்கை அளிக்க 'ஜில்'லென்று குளிர்வித்த ஐஸ் க்ரீம் சுவைகாம்ப்ளான் கொடுங்கள்.

புரதங்கள், நேரடியாக உடல் வளர்ச்சிக்கு பலனளிக்கும் சத்துக்களாகும். காம்ப்ளான், மிக மேலான புரதச் சத்துக்களையும்—அதாவது, பால் புரதச் சத்துக்களையும் (20%) மற்றும் 22 இதர மூலாதார உணவுச் சத்துக்களையும் தருகிறது. இவை வளரும் சிறுவர்களுக்கு தினப்படி தேவைப்படுவதாகும். துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு— அன்றாடம் இருவேளை.

காம்ப்ளான் ருசிமிகுந்த சாக்கலேட், ஸ்ட்ராபெர்ரி, ஏலக்காய்—குங்குமப்பூ சுவைகளிலும் மற்றும் சாதாரண ரகத்திலும்கூட கிடைக்கிறது.

பால் சேர்த்திடத் தேவையில்லை.








**காம்ப்ளான்® -திட்டமிட்ட பரிபூரண உணவு**

GLC.203.12 Tam



# என்ன போட்டி?

## பட்டுப் புடவை பரிசுத் திட்டம்

**போட்டி: 51**

அடுத்த வாரத்துடன் ராகமாலிகா பட்டுப் புடவை பரிசுத் திட்டம் முடிந்து வி. ஐ. பி. ஸூட் கேஸ் பரிசுத் திட்டம் ஆரம்பமாகிறது. இதில் வாசகர்கள் ரசனையுடன் எளிதில் பங்கேற்று மகிழுமாறு என்னென்ன போட்டிகள் வைக்கலாம்? கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். ஏற்கப்படும் யோசனைகள் பிரசுரமாவதுடன் பரிசு பெறும். தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் பட்டுப் புடவை. உறையின் மேல் "என்ன போட்டி?" என்று அவசியம் குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 6.5.85**

கடைசி இரண்டு பட்டுப்புடவைகளைப் பெறப் போகும் அதிர்ஷ்டசாலிகளுள் ஒருவராய் நீங்கள் இருக்கலாமே!

என் பெயர்: ..............................

விலாசம் : ..............................

..............................

சொல்லி வெளியனுப்பி விட்டு தானும் வலிய பக்கத்து வீடுகளுக்கு சென்று பேசி விட்டு வந்திருக்கிறாள். இப்படி இங்கிதமாக ஏற்படுத்திக் கொடுத்த தனிமையில் சாரம் இல்லையா என்ன?

எப்படியோ போய் விட்டான். அதற்காக வீட்டுக்கு ஒரேயடியாக வராமல் நின்று விடவில்லை. வருகிறான். சமயங்களில் இரண்டு பேரும் வருகிறார்கள். அப்படி அவன் வரும் காலத்தில் சரோவுக்கும் அம்மாவுக்கும் பூ கொண்டு வருவான். பெரிய மனத்தோடு சில ஜாக்கெட் துண்டுகள் சில சமயம் நல்ல புடவை இப்படி சரோவுக்கு ஏதேனும் கிடைக்கிறது. அம்மாவுக்கு இதில் அதிக மகிழ்ச்சி. நாளைக்கு வாங்க அத்தை என்று நேரிடையாக சொல்வதில்லை. "மாங்காய் ஊறுகாய் போடணும். எவ்வளவு மிளகாய் போடணும்னு தெரியல" என்பாள். இதைக் கொண்டு இரண்டு முறை போய் வரலாம். இது இருவருக்கும் பரஸ்பர அழைப்புத் தான்.

அவன் சம்பளம் கொடுக்க வந்தால் தனியாக வருகிறான். வீட்டுக்கு கொடுக்க வேண்டிய பணத்தை மேஜை டிராயரில் வைத்து தள்ளி மூடுகிறான். சமயங்களில் டிரான்சிஸ்டர் அடியில் சொருகிவிட்டு அண்ணாந்து பார்க்கிறான். தினக்காலண்டரை புத்தகத்தை வருடுவது போல வருடி நிற்கிறான். மொத்தத்தில் அன்னிய வீடாய் எண்ணி கூச்சப் படுகிறான்.

அப்படியே விட்டு விட முடிகிறதா என்ன? அம்மாவால் அப்படி செய்ய முடியுமா? சமையலறைக்கு அழைத்துப் போகிறாள். இரண்டொரு கேள்வி கேட்கிறாள். உட்காரச் சொல்லி சாப்பாடு போடுகிறாள். அவனும் பழைய நினைவுகளோடு சாப்பிட வேண்டும் என்கிற எண்ணத்தோடு தான் மதிய வேளையில் வருகிறான். அவனது தட்டு இன்னமும் அலமாரியில் இருக்கிறது. அவன் இல்லாவிட்டாலும் அம்மா தட்டை பளபளப்பாக தேய்த்து வைக்கிறாள். இனம் தெரியாத ஏக்கம் அவள் கண்களில் தெரிகிறது. இங்கிருக்கும் சில நேரங்களில் அவன் ஆன்மா இன்பத்தில் ஆழ்கிறது. அப்பாவிடம் முன்பைவிட அதிகமாகவும் அன்பாகவும் பேசுகிறான். அவருக்கு இது இதமாக இருக்கிறது. அம்மாவும் சாதமிடும் சமயங்களில் தும்மல் இருமல் வராமல் பார்த்துக் கொள்கிறாள். ஆக மாதக் கடைசியில் ஒரு வசந்தத்தை அவர்கள் ஆவலோடு எதிர்பார்க்கிறார்கள். இப்படியாக ஒரு வருடத்தில் பன்னிரண்டு வசந்தம் அந்த வீட்டில் நிலவுகிறது.

ஆனாலும் அம்மா எதையோ இழந்து விட்டதை உணர்கிறாள். கடைக்குப் போய் விட்டு வரும்போது எதையோ தவறவிட்டு விட்ட துயரம் இருக்கிறது. அது இந்த வழியில் தான் விழுந்திருக்க வேண்டும் என்று யூகிக்கிறாள். ஆனாலும் எங்கே? சரியாக எந்த இடத்தில்? அவளால் சொல்ல முடியவில்லை.

## தங்கக் கம்பிதான் உங்கள் மகன்-அவனுக்கு தங்கப் பதுமையென ஓர் நங்கையை தேர்ந்தெடுங்கள்.





உங்கள் அன்பு மகன் குணத்திலே தங்கக் கம்பி. நல்ல தேர்ச்சி பெற்றவன். அவன் தகுதிக்கு தங்கப்பதுமை போன்ற ஓர் நங்கையைத்தானே அவன் தேர்ந்தெடுக்க வேண்டும். அவன் தேர்வுக்கு விரிவாக உதவுவது டைம்ஸ் ஆஃப் இந்தியா. பல லட்சம்பேர் படிப்பது. உங்களைப் போன்றதே அவர்கள் பின்னணியும். வேறென்ன வேண்டும் உங்கள் தங்க மகனுக்கு.

டைம்ஸ் ஆஃப இந்தியாவின் திருமணப் பத்திகளில் விளம்பரம் செய்திடுங்கள்... மணமக்களைத் தேர்ந்தெடுக்க, உங்கள் மகனுக்கு வாய்ப்பளியுங்கள்.

**மனம்விரும்பும் தேர்வுக்கு வழி வகுக்கிறது 'டைம்ஸ்'- அதை 3,30,000 மணவாயிலில் காத்திருக்கும் குமரிகளும் அவர்களின் பெற்றோரும் வாசிக்கிறார்கள் என்பது உங்களுக்கு மகிழ்ச்சி தருகிறதல்லவா?**

THE TIMES OF INDIA

ACIL-BC-38/85B-Tam.

# சின்ன பெரிய வயிறு

## பிரதிபா ராஜகோபாலன்

"இன்னைக்காவது புள்ளையை தனியார் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போகணுமுங்க. வயிறு இன்னும் உப்பிட்டுப்போகுது. கட்டி பெரிசாகுமோ என்னமோ? மருந்து சாப்பிட்டாக் கரையலாம்னு சொன்னாரே டாக்டர். எத்தனை நாள் இப்பிடியே புள்ளையை விட்டு வைக்கறது? அவளைப் பார்க்கறதுக்கே சகிக்கலேங்க. ஒரு வாய் சாப்பிட மாட்டேங்குது" என்று சரோஜா பஞ்சாலைக்குப் புறப்பட்ட கணவனிடம் மெதுவாக, ஆனால் அழுத்தமாகச் சொன்னாள்.

பசுபதி திரும்பித் தன் மனைவியை நிதானமாகப் பார்த்துக் கேட்டான்.

"இன்னைக்குத் தேதி இருபத்தி ஏழு. யார் கிட்டப் பணம் இருக்கு?"

"இருக்கிறவங்க கிட்ட கைமாத்தா வாங்கிட்டு வாங்க. சம்பளம் வந்தாத் திருப்பிக் குடுத்திடலாம்."

"கடன் வாங்கறது தெரியாமயா இருக்கறேன்? நான் கேக்கக் கூடிய ஆளு மட்டும் குபேரனுவா இருப்பாங்க?"

"கேக்காம எப்படித் தெரியும் உங்களுக்கு. ஒருத்தன் குபேரன், குசேலனுண்ணு?"

"சரி பார்ப்போம்" என்ற பசுபதி லேசாகப் பனி பரவியிருந்த அந்தக் காலையில் பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு, ஒரு மைல் தூரத்தில் உள்ள தன் பஞ்சாலையை நோக்கி நடந்தான்.

அவனைப் போலவே சில தொழிலாளர்கள் சைக்கிளில் கடந்து போனார்கள்.

'ஒரு சைக்கிள் வாங்கணும்னு நாமளும் நாலு வருஷமா முயற்சி பண்றேம் முடியலே' என்று மனசுக்குள் ஏங்கிக் கொண்டு நடையை வேகப்படுத்திய பசுபதியை ஒட்டியவாறு ஒரு சைக்கிள் நின்றது.

"ஏறுங்க பசுபதி அண்ணே" என்ற குரலுக்குப் பின் ராமகிருஷ்ணன் ஒரு காலைப் பாதையில் ஊன்றியவாறு நின்றிருந்தான்.

"இன்னைக்கி, உனக்குப் பகல் ஷிப்டா, ராமகிருஷ்ணன்?" என்று கேட்டவாறு பின்னல் உட்கார்ந்து கொண்டான்.

"இந்த வாரம் பகல் ஷிப்டைக் குடுத்துட்டாரு மாஸ்டரு... இல்லேன்னா ஃபுல் நைட்டு தானே குடுப்பாரு?" சைக்கிள், புளியமர வரிசைகளில் சிறைப்பட்டிருந்த அடர்த்தியான பனியின் நடுவே ஊர்ந்தது.

"இன்னும் பர்மனண்ட் ஆகலேயா நீங்க?" என்று ராமகிருஷ்ணன் கேட்டான்.

"எங்கே ஆனேன்? பதிலிக்குப் போய்ப் போய்த்தானே எம் பொழுப்பே இப்படி இருக்குது? நடுவிலே கரண்ட் கட்டு வந்தது... வயித்துல மண்ணைப் போட்டது. ஸ்டோர்ல மாசத்துக்கு நூறு நூத்தி இருபத்தஞ்சுக்குக் கடன் தர்றாங்க. பொழுச்சேன்" என்ற பசுபதி, சலித்துக் கொண்டான்.

"மாசத்துக்கு இருபது நாளுக்காவது வேலை தாருண்ணு சந்தோஷப்படுங்கண்ணே!" சைக்கிள் மில்லைச் சமீபித்தது.

மெயின் ரோட்டுக்கு முன்புறம் யூனியன் ஆபீஸ். இரண்டு டீக்கடை. ஒரு பெட்டிக் கடை. தொழிற்சங்கங்களின் போஸ்டர்கள். ஆங்காங்கே கும்பல் கும்பலாய்த் தொழிலாளர்கள்; அரைக்கால் பேண்ட்டுடன், பீடிப் புகையுடன், தினசரியுடன், விவாதங்களுடன்.

சைக்கிளில் இருந்து பசுபதி இறங்கிக் கொண்டான்.

"ராமகிருஷ்ணன், ஒண்ணு கேட்பேன். கோவிச்சுக்க மாட்டீங்களே?" என்று சைக்கிளில் இறங்கிப் போன ராமகிருஷ்ணனைப் பசுபதி, தயங்கியவாறு கேட்டதும், அவன் புன்சிரிப்புடன் சொன்னான்.

"பணம்தானே? எனக்கே இப்ப நூறு ரூவா வேணும். ரெண்டு மாசமா மாமியார் எங்க வீட்லதான் இருந்தாங்க. இன்னைக்கிச் சாயந்திரம் திருவள்ளுவர்ல திருச்சி போறாங்க. டிக்கட் வாங்கணும். கைல பணம் குடுத்தனுப்பணும். யூனியன் ஆபீசுக்குள்ள அரவிந்தாட்சன் இருப்பான். அவன் கைலபணம் இருக்கும். வட்டிக்கு உடறவன்தானே? நூத்துக்கு வாரம் பத்து ரூவா வட்டி. கேட்டுப் பாக்கலாம்" என்றவன், சைக்கிளை யூனி

யன் ஆபீஸ் முன் நிறுத்திவிட்டு, உள்ளே போய் அரவிந்தாட்சனை விசாரித்தான்.

''இரிஞ்சால குடா போயிருக்கான்'' என்று அவன் தோழன் ஒருவன் பதில்சொன்னதும், தற்காலிகமாய் முளைத்த நம்பிக்கை மண்ணில் விழுந்தது.

''என்ன செய்யலாம்?'' என்று பசுபதி கேட்டான்.

''ஸ்டோரில் சாமான்க வாங்கிட்டீங்களா?''

''அரிசி வாங்கணும்.''

''பேசாம நான் சொல்றதைக் கேளுங்க. ஸ்டோர்ல நூறு ரூபாய்க்கு அரிசி வாங்கி, நம்மாளுக கிட்ட பத்திருபது கொறச்சு, ரொக்கத்துக்கு வித்துடுங்க. கைமேல்க் காசு கெடைக்கும்.''

ஒரு செகண்ட், மருத்துவமனையில் வைத்தியம் செய்தும் குணமாகாத, தன் ஒரே பெண் குழந்தையின் வயிற்றுக் கட்டி நினைவுக்கு வந்தது.

''சரி, ராமகிருஷ்ணன், இதுவும் ஒரு வழிதான்'' என்ற பசுபதி, சைரன் சத்தத்தைத் தொடர்ந்து பஞ்சாலைக்குள் புகுந்தான்.

* * *



ஸ்பின்னிங் டிபார்ட்மெண்ட்டுக்குள் இருந்து வேலைபார்த்தாலும் மனசு குழந்தையின் மேல்தான் கவனமாய் இருந்தது.

வயசுக்கு மீறிய புத்திசாலி அவள். கண் ஜாடை காட்டினால் போதும் சொல்ல வந்ததைப் புரிந்து கொள்வாள். சில நாட்களில் பசுபதிக்கு வேலை இருக்காது. 'நோவொர்க்' விட்டு விடுவார்கள். மாதத்தில் பத்து நாள் கூட அப்படி இருக்கும். ஒரு நேரம் சாப்பிட வேண்டிய நிலை வந்துவிடும். அப்போது, குழந்தைக்கு மட்டும் பக்கத்து நாயுடு கடையில் இட்லி வாங்கித் தருவான். 'ஆளுக்கொண்ணு சாப்பிட்டாத்தான் நான் சாப்பிடுவேன்' என்று குழந்தை பிடிவாதம் பிடித்துப் பெற்றோரையும் சாப்பிட வைத்துவிடுவாள். 'சீக்கிரம் படிச்சிட்டு வேலைக்குப் போய்ச் சம்பாதிப்பேம்ப்பா' என்று உறுதிபடக் கூறுவாள்.

அவளுக்கு வயிற்றுவலி என்று 'ஜன்னல்' ஆஸ்பத்திரியில் பார்த்தார்கள். கலர் கலராய் மருந்து கொடுத்ததில் பலன் தெரியவில்லை.

"ஜெனரல் ஆஸ்பத்திரி மருந்து ஒண்ணும் வேலை செய்யலை. பிரைவேட்ல பாரு" என்று பக்கத்து வீட்டுக்காரர் சொன்னார்.

அப்போது இருந்த காசில் போய் வைத்தியம் பார்த்தார்கள். ஒரு வாரம் நன்றாய் இருந்தது போலிருந்தது. மீண்டும் வலிக்கிறது, சாப்பிட முடியவில்லை என்று சொன்னதும் மீண்டும் அங்கே போனார்கள். தீவிர பரிசீலனைக்குப் பின், வயிற்றில் கட்டி என்றார் டாக்டர். ஆப்ரேஷன் செய்தால் குணப்படுத்தலாம் என்றும் சொன்னார்.

தங்கள் ஏழ்மையை விவரித்தும், டாக்டர் மருந்து கொடுத்தாலும் கரையலாம் என்று இன்னொரு வழியைச் சொன்னார்.

"நூறு ரூபாயாவது கொண்டு வாங்க பார்க்கலாம்" என்று உறுதியாய்ச் சொல்லி அனுப்பிவிட்டார்.

ராமகிருஷ்ணன் சொன்ன வழிதான் சரியானது என்று புலப்பட்டது.

மதியம் சாப்பாட்டு நேரத்தில் நூற்று இருபத்தைந்து ரூபாய்க்கு அரிசி வாங்கி தன் டிபார்ட்மெண்ட்டிலேயே இருக்கும் ஒருவருக்கு நூற்று ஐந்துக்கு விற்றான்.

சாயந்திரம், மனைவியிடம் பணத்தைக் கொடுத்ததும் அவள் ஆச்சரியப்பட்டாள். பசுபதி விஷயத்தைச் சொன்னான்:

"பணத்துக்காக இப்பிடிச் செஞ்சுட்டீங்க. விட்ல, இன்னைக்கோட அரிசி முடிஞ்சது நாளைக்குச் சோத்துக்கு என்னங்க பண்றது?"

"சின்ன வயித்தைக் காப்பாத்தறதுக்காக, பெரிய வயித்தைக் காயப் போட வேண்டியதுதான். இதில் ஒண்ணும் தப்பில்லை. மொதல்ல பிள்ளையக் கவனிப்போம்" என்ற பசுபதி, சமையல்பகுதியில் நுழைந்து, பானைத் தண்ணீரை நிதானமாய்க் குடித்துவிட்டுப் பெண்ணை அழைத்து மடியில் வைத்துக் கொண்டான்.





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1985

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதை போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ | 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ | 500 |
| மூன்றாம் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ 250 வீதம்) | ரூ | 500 |

ஆக மொத்தம் ரூ 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், கதை வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15

* உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

ஆசிரியர், கல்கி, சென்னை—600 032.

**முன்னேற்றம் காணாத முக்கிய துறை**

தாங்கள் முதல்வரான பிறகு முன்னேற்றம் காணாத துறையாகவே இருந்து வருகிறது நூலகத் துறை. சமுதாய வளர்ச்சியில் அதி முக்கியமான பங்கு வகிக்கும் நூலகங்கள் மேன்மை அடைய உடனே நடவடிக்கை எடுங்கள்.

மா. சக்திவேல், ஈரோடு.

**இந்த முறையேனும்**

மூன்றாவது முறையாக முதலமைச்சராக வந்திருக்கிறீர்கள். இந்த முறையாவது ஊராட்சி, நகராட்சி தேர்தல்களை நடத்துங்கள்.

சாந்தி, விருதுநகர்.

**சிமெண்ட் விற்கும் விலையில்...!**

கிராமப் திட்டத்துக்கென கோடிக் கணக்கில் செலவழித்துத் தயாரித்த சிமெண்ட் குழாய்கள் சீந்துவாரின்றி கிடக்கின்றன. அவற்றை உடனே பல கிராமங்களுக்கு விநியோகித்து அவற்றை மேல் நிலை குடிநீர்த் தொட்டிகளாகப் பயன்படுத்தலாமே!

எஸ். கண்ணன், வடலூர்.

**சொன்னதைச் செய்து காட்டுங்கள்**

பொருளாதார அடிப்படையில் பின்தங்கியவர்களுக்கு சலுகைகள் வழங்கப்படும்என்று முன்பு அறிவித்ததை அடியோடு மறந்துவிட்டீர்களோ? இப்போது அதை தைரியமாக செயலாக்கிக் காட்டுங்களேன்.

வி. சங்கரநாராயணன், சென்னை—5.

**தண்ணீர் பெருகணும்; கண்ணீர் ஒழியணும்.**

குடிநீரை குடிபெயர வைத்து
குடிநீரை குடியமர்த்த வேண்டும்.

குறிப்பு: 1. குடிநீர் — சாராயம்; 2. குடிநீர் — கிருஷ்ணா நதி நீர்.

பி. சீனிவாசன், ஆத்தூர்.

**நெஞ்சு பொறுக்குதில்லையே**

உங்கள் கட்சி குட்டித் தலைவர்களை தட்டி வையுங்கள்! நீங்கள் அமெரிக்காவில் இருந்த போது அவர்கள் நடத்திய நாடகங்களை எங்களால் பொறுக்க முடியவில்லை.

இரா. சி. துரை, புது டில்லி.

**சகாய விலையில் சமைக்காத சத்துணவு**

நெல்லிற்கு இறைத்த நீர் வழிமாறி புல்லுக்குப்பாய்ந்ததுபோல உங்கள் சத்துணவுத் திட்டத்துக்கு ஒதுக்கீடானதெல்லாம் ஏழை குழந்தைகளை வந்தடையுமுன்னரே ஆங்காங்கே உறிஞ்சப் பட்டுவிடுகிறது. இதற்கு பதில் ரேஷனில் சுத்தமும், தரமும், சத்தும் நிறைந்த கேழ்வரகு, கோதுமை போன்ற





# வருக்கு
# யோசனை

வற்றை மலிவு விலையில் வழங்கினால் பல குடும்பங்களுக்கு அனுகூலமாய் இருக்கும்.

ஆர். பவானி, சென்னை–35.

**ஒரே ஆண்டில் தலை நிமிர...**

தொழில் துறை தேக்கத்தை நிவர்த்தி செய்ய திரு கப்ரேஷ் கிருஷ்ணா, திரு நா. மகாலிங்கம், திரு ஜி. கே. தேவராஜுலு போன்ற வல்லுனர்களை மாவட்டத்திற்கு ஒருவரென நியமித்து அவர்களின் தலைமையில் பொருளாதார, தொழில் இலாக்காக்களைச் சீர்தூக்கலாம்.

ஜெயராமன், பெங்களூர்.

**காவல் துறையைக் கட்டிப் போடாதீர்கள்.**

காவல் துறை அமைப்பில் அரசியல்வாதிகளைத் தலையிட விடாமல் சுதந்திரமாக இயங்க அனுமதித்து தமிழக போலீசின் இழந்த பெருமையை மீட்டுத் தர ஆவன செய்யுங்கள்.

பத்மா சுந்தரம், கல்பாக்கம்.

**பிரச்னையாகிவிட்ட பரிசுச் சீட்டு**

லாட்டரி சீட்டுக்களின் விலை அதி வேகமாய் அதிகரித்துக் கொண்டே போகிறது. ஏழைகள் கரையேற வேண்டுமானால் லாட்டரி சீட்டு விற்பனையைத் தடை செய்தே ஆக வேண்டும்.

ஆர். லீலாவதி, சென்னை–28.

**அடிப்படை மருத்துவ வசதி**

நீங்கள் இன்று இருக்கும் நல்ல நிலைமைக்குக் காரணம் வியத்தகு மருத்துவ வசதிகளே. ஆனால் அடிப்படை மருத்துவ வசதிகள் கூட இல்லாத எத்தனையோ கிராமங்கள் தமிழகத்தில் மலிந்து இருக்கின்றன. அனைத்து கிராமங்களுக்கும் அடிப்படை மருத்துவ வசதி வழங்க ஆவன செய்யுங்கள்.

சு. சௌந்திரராசு, தேனி.

**விழாக்களுக்கு ஒரு மூடு விழா**

அரசும் கட்சிகளும் நடத்தும் ஆடம்பரமான விழாக்களை கை விட்டு விட்டு அதனால் மிச்சமாகும் பணத்தை சத்துணவு மற்றும் இதர திட்டங்களுக்கு உபயோகிக்கலாம்.

பொ. சு. சேஷாத்திரி, தஞ்சாவூர்–1.

**சத்தான யோசனை**

தற்காலிகப் பலன் தரும், சத்தற்ற திட்டங்களைக் கைவிட்டு, நிரந்தரப் பலன் காணும் விதமாய் ஆக்கப்பூர்வமான செயல் திட்டங்களில் தங்கள் கவனத்தைத் திசை திருப்புங்கள்.

எல். வத்சலா, திருவாரூர்.

**வாசகர் பங்கு**

**மின்வெட்டுக்கு ஒரு வெட்டு**

கோடையில் மட்டுமிருந்த மின்வெட்டு இப்போது ஆண்டு முழுவதும் அமலாகி விட்டது. ஏற்கனவே உள்ள தமிழக அனல் மின் நிலையங்களைத் திறம்பட செயல்படச் செய்தும், புதிய மின் நிலையங்களை நிறுவியும் தமிழகத்தை ஒளிமயமாக்குங்கள்.

ஆர். ஜி. சுப்பிரமணியன், சென்னை—59.

**ஆஸ்திக மறுமலர்ச்சிக்கு...**

தமிழகத்தின் பழம் பெரும் கோயில்களின் நில உடமைகளை விவசாய உரிமை சட்டத்தின் பிடியிலிருந்து விடுவித்து, அரசாங்கமோ, அறக்கட்டளைகளோ பொறுப்பேற்று எல்லா ஆலயங்களிலும் பூஜை முறைப்படி நடக்கவும், அர்ச்சகர்கள் உணவுப் பிரச்னை பற்றிய சிந்தையின்றி இறைப் பணி ஆற்றவும் ஏற்பாடு செய்யுங்கள் பார்க்கலாம்.

சரோஜா முனிரத்தினம், சென்னை—10.

**அவசரத் தேவை**

ராஜாஜி கூறியது போல் ஆட்சியில் கட்சிக் குறிக்கீட்டை தவிர்க்க வேண்டும். அடி மட்டத்திலிருந்து மேல் மட்டம் வரையிலும் அரசு நிர்வாகத்தில் கட்சிக்காரர்கள் தலையிடுவதற்கு முதலில் தடை விதியுங்கள்.

எஸ். கருணையானந்தம், உசிலம்பட்டி.

**மூதறிஞர் காட்டிய வழியில்**

மூதறிஞர் ராஜாஜி தமிழக முதல்வராக இருந்த போது உணவுப் பொருட்கள் மீதிருந்த கட்டுப்பாட்டை நீக்கினார். அவரை உதாரணமாகக் கொண்டு நீங்களும் லஞ்ச ஊழலுக்குச் சாதகமாய் இருக்கும் இக் கட்டுப்பாடுகளை நீக்குங்கள்.

கே. லெட்சுமணன், மதுரை.

**கல்வித்துறை சீரமைப்பு**

மத்திய அரசுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி கல்வி முறையில் மாற்றங்கள் ஏற்படுத்தி தொழிற்கல்வியைக் கட்டாயமாக்குங்கள். உதவிப் பணம் என்று வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு வழங்கி அவர்களது தன்மானச் சிறகை உடைப்பதும், சிறு பிள்ளைகள் மூட்டை தூக்கிப் பிழைப்பதும் நின்று போகும்.

திருமதி ஆர். சாந்தா, ஓஜார்.

**அபயக் குரல்**

எங்கும் முகமூடி கொள்ளை மயமாக இருக்கிறது. காவல் துறையை பலப்படுத்தி, தமிழ் நாட்டைத் திருடர்களிடமிருந்து காப்பாற்றுங்கள்.

வ. அண்ணாமலை, மதுரை.

**ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையை குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**எஸ். கருணையானந்தம்,**
**கார்த்தி ஸ்டோர்,**
**முருகன் கோயில் தெரு**
**உசிலம்பட்டி 626532**
**மதுரை மாவட்டம்.**

---

அடுத்த வாரம்:

# பறக்கும் தட்டுக்களைப்



# பார்த்திருக்கிறீர்களா?

சிறப்புக் கட்டுரை

# ஆகாச கங்கை

## 15

வசுமதி என்னதான் அப்பா அம்மா விடம் அன்று கோபமாய்ப் பேசி வெளி யேறினாலும் வீட்டை விட்டு ஹாஸ்டல் அறைக்குக் குடி போகவில்லை. பத்தியானம் விடு திரும்பினாள். ஸீனியர் கே. ஜி. கே. கொடுத்த தகவலிலிருந்து அரவிந்தன் ஏற் கனவே பம்பாயிலிருந்து திரும்பி விட்ட தாகத்தெரிந்தது.அப்படியானால்ஏன் அவன் தன்னுடன்தொடர்புகொள்ளவில்லை என்ற கேள்வி இயல்பாய் எழுந்தது. மறு கணமே கேள்வி அசப்பாவிதமாய்ப் பட்டது. எப் படி அவன் இன்னும் எதிர்பார்க்கலாம்? அவனே முற்றுப்புள்ளி வைத்த ஒரு விஷயத் துக்கு அரவிந்தன் எப்படி புத்துயிர் கொடுப்பான்?

அன்று மாலை நான்கு மணி இருக்கும். காலையில் தோய்த்துப் போட வேண்டிய புடவை மற்றும் இதர ஆடைகளை வசுமதி அலசிக் கொண்டிருந்தாள். புடவைகளைத் தோய்த்தபின் குளிக்க வேண்டும். அதன் பின் என்ன செய்ய? டீ. வி. யில் காட்டப் படும் சினிமாக்களைப் பார்ப்பதை விட தூக்க மருந்தைச் சாப்பிட்டு உடனடியாகத் தூங்கி விடலாம். நல்ல சொப்பனங்களைக் காண வாவது வாய்ப்பு கிடைக்கும். இப்பு கல் தான் காலத்துப் படங்கள். இருநூறு ஆண்டு சரித்திரமல்லவா? இரு நூறு தடங்கல்கள். உயிரற்ற வருத்தத் தகவல்கள். குளித்த பிறகு பெசண்ட் நகர் பிள்ளையார் கோவிலைத் தரி சனம் செய்து விட்டு அப்படியே சிநேகி லலிதாவைப் பார்க்கலாம். முடிந்தால் இரு வரும் பீச்சு மணலில் உட்கார்ந்து சிறிது நேரம் பேசலாம்.

அவள் குளியலறையில் சிந்தித்துக் கொண்டிருக்கையில் அரவிந்தன், காரை நிறுத்தி விட்டு மாடி ஏறி வந்தான். அந்த வேளையில் சீதாவும், கற்பகமும் ஏதோ ஒரு பாட்டு போட்டியை வேடிக்கை பார்க்கச் சென்றிருந்தார்கள். தியாகராஜ சுவாமியை அக்கு வேறு ஆணி வேறாகப் பிய்த்து எடுக் கும் காட்சியைக் காண ஒரு ஆவல். அவர் களுடைய தாயாருக்கு அன்று உலகத்தின் மீதே ஏதோ கோபம். அது எதிரொலிக்கும் விதத்தில் அரிசி உப்புமாவைப் பண்ணியிருந் தாள். தேவைக்கு அதிகமாகவே உப்பு. அவள் இப்போது சமையலறையிலேயே உட் கார்ந்து, பெரிய எழுத்து விக்ரமாதித்தனில் ஏழாவது படிக்குக் காவலாகிய ஏகபோக மதனவல்லிப்பதுமை சொல்லிய கதையைப் படித்துக்கொண்டிருந்தாள். ஏழரைநாட்டுச் சனி விக்ரமாதித்தனைப் பிடித்திருக்கிறது. கதையில் அவள் மூழ்கினாள்.

ஆறுக்கு மூன்று என்ற வராந்தாவில் ஒரு அழுக்கேறிய சாய்வு நாற்காலியில் உட் கார்ந்து ஒரு சிறு முக்காலி மீது கால்களைப் போட்டு, தம் மண வாழ்க்கையை இன்ப மயமாக்கத் தக்க கருவியை உபயோகப் படுத்த தவறியதற்காக அறுபது வயதில்



சதாசிவம் தம்மைத் தாமே சபித்துக் கொண்டிருந்தார். அன்றைய 'ஹிந்து' வில் அவருடைய இரு பெண்களுக்கு ஏற்ற வரன்கள் ஏதும் விளம்பரத்தில் வராதது ஏமாற்றமாக இருந்தது.

திடீரென்று, ''நமஸ்காரம் சார்!'' என்ற குரல் கேட்டது.

சதாசிவம் ஏறிட்டுப் பார்த்தார்.

அரவிந்தன்.

அவனுக்குப் பின்னால் அவன் எதிரே இல்லாத போது ஆயிரம் வசை பாடும் அவர் அவனைக் கண்டதும் புன்முறுவலித்தார். என்னதான் வசுமதியை அவர்கடிந்துகொண்டாலும், உள்ளூற அவன் தமக்கு மாப்பிள்ளையாக வர வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். இவன் தன் மூத்த பெண்ணைக் காதலித்துக் கலியாணம் செய்து கொண்டிருந்தால்எவ்வளவுநன்றாக இருக்கும்?பொருளாதார வசதி பெருகும். அவனுடைய தயவால் மற்ற பெண்களுடைய திருமணங்களைச் சரிக்கட்டி விடலாம். இருந்தாலும் பரவாயில்லை. வசுமதிக்குக் கீழே இன்னொரு பெண் இருக்கிறாளே?

''வாங்கோ, மிஸ்டர் அரவிந்தன்... பார்த்து ரொம்ப நாளாச்சு...'' அவர் இன்னும் சாய்வு நாற்காலியை விட்டு எழுந்திருக்கவில்லை.

''சௌக்யமா, சார்?''

''ஏதோ இருக்கேன்... வசு... வசு!''

குளியலறையில் இருக்கும் வசுமதிக்கு அப்பாவின் குரல் கேட்கவில்லை. ஆனால் ஏகபோக மதனவல்லி சொன்ன கதையில் தன்னைப் பறி கொடுத்த சாரதாவுக்கு காது கேட்டது.

''யாரது...?'' அவள், தன் கைப் புத்தகத்தை வைத்து விட்டு எழுந்து வந்தாள். யாராவது மூத்த பெண்ணின் கலியாண விஷயமாக வந்திருப்பார்கள் என்று நம்பி வந்த அவள் அரவிந்தனைக் கண்டதும் காற்று இழுந்த பலூன் போல சுருங்கினாள்.

''ஓ நீங்களா? இருங்கோ! வசு.. வசு..''

தன்னை இன்னும் யாரும் உட்காரச் சொல்லவில்லை என்ற எண்ணம் அரவிந்தனுக்கு வந்த போது, எரிச்சல் வந்தது. அடக்கிக் கொண்டான்.

இதைப் புரிந்து கொண்டவரைப் போல சதாசிவம், ''சாரதா, நாற்காலியைப் போடு. சார் உட்காரட்டும்'' என்றார்.

''இங்கே எங்கே இடம் இருக்கு? நீங்க உள்ளே வாங்கோ.''

பன்னிரண்டுக்கு பத்து என்ற அளவில் டிராயிங் கம் டைனிங். சின்னஞ் சிறு சாப்பாட்டு மேஜை. நான்கு நாற்காலிகள். ஒன்றை இழுத்தாள் சாரதா.



ஏ.ஜீ.ஆர்.

"வசு-இப்ப வந்துடுவா..." என்றான்.

"ஆபீஸெல்லாம் எப்படி இருக்கு?" என்றார் சதாசிவம்.

"அப்படியேதான் இருக்கு. வசு என்ன செய்யறா?"

அவன் கேட்டு முடிப்பதற்குள் வியர்த்துக் கொட்டும் முகத்தைத்துடைத்துக்கொண்டு, ஈரம் கசிந்த புடவையுடன் வசுமதி வந்தாள்.

அரவிந்தனை பார்த்ததும் திடுக்கிட்டாள். திகைத்தாள். துக்கம் பீரிட்டுக் கொண்டு வந்தது. அன்று காலையில்தான் ஸீனியர் சொன்னார். அரவிந்தன் பம்பாயிலிருந்து திரும்பி விட்டான் என்றும், தாரக்ராம் அவருக்கும் அவனுக்கும் நன்றி தெரிவித்தார் என்றும்.

"ஹலோ வசு..."

"எப்ப வந்தீங்க?" என்றாள்.

"முந்தா நாள்."

"எல்லாம் நல்லபடியா இருந்ததா...?"

"ம்... உங்கிட்டே அது பத்திப் பேசணும்னுதான் வந்தேன் வசு!"

"நானும் இதோ இவளும் இங்கே இருக்கலாமா? இல்லே அந்த ரூமிற்கு போகவா?"

"நீங்க இருந்தா என்ன சார்?"

"இல்லே. கேட்டேன்... நீங்க எங்களைப் பார்க்க வரலேயே, மிஸ்டர் அரவிந்தன்!" என்றார் சதாசிவம்.

"அது என்னவோ உண்மைதான், சார்! ஆனா இப்ப நான் உங்க பெண்ணோட ரகசியம் பேச வரலே... அவகிட்ட ஒரு ஹெல்ப் கேட்க வந்தேன்."

"என்ன ஹெல்ப்?" என்றாள் சாரதா.

"வசு, நாளைக்கு உன்னாலே என்னை ஒரு நல்ல நகைக் கடைக்கு அழைச்சுட்டுப் போக முடியுமா... எனக்குப் பெரிய நகை வாங்கி அநுபவம் இல்லே..."

"நாலு மணிக்கு மேலே வந்தாப் போதுமா?" என்றாள் வசு. அவளுக்குப் புரிந்து விட்டது.

"என்ன நீங்க ரெண்டு பேருமாகவே எல்லாத்தையும் முடிவு பண்ணிண்டா என்ன அர்த்தம்? பெத்தவான்னு நாங்க எதுக்கு இருக்கோம்...?" சாரதா வசுமதியைப் பார்த்துக் கொண்டே அரவிந்தனிடம் சீறினாள்.

"நீங்களும் கூட வந்தா எனக்கு இன்னும் ரொம்ப சந்தோஷமா இருக்கும், மாமி... ஒரு கார்னெட் நெக்லஸ் வாங்கணும்... ஒரு வைர மோதிரம் செலக்ட் பண்ணணும்."

"ஏண்டி வசு, இதெல்லாம் இவர் உனக்கு வாங்கப் போறார்னு நீ என் முன்னாடியே சொல்லலே?" என்றாள் சாரதா. இப்போது அவளுடைய குரலே மாறி, ஃப்ரிஜ்ஜில் வைத்த தக்காளி போல குளிர்ந்தது.

"நாலு மணிக்கு ஹைகோர்ட்டுக்கு வாங்கோ. பாபாலால்லே வாங்கலாம்."

"முகூர்த்த நாளையும் நீங்களே நிச்சயம் பண்ணிக்கப் போறேளா இல்லே நாங்க பஞ்சாங்கத்தையாவது பார்க்கலாமா?" என்று கேட்டார் சதாசிவம்.

அரவிந்தன், "சார் நீங்க விஷயம்புரியாமப் பேசிண்டு போறேள்... நெக்லசும் மோதிரமும் உங்க பொண்ணுக்கு இல்லே, எனக்கு மனைவியா வரப்போறவளுக்கு..." என்றான்.

"இது என்ன புதுக் கதை?" என்று கத்தினாள் சாரதா.

"பேசாம இரும்மா" — வசு.

"ஏண்டி நீ உன் அம்மா வாயை அடைக்கிறே... என்ன அரவிந்தன், என்ன சொன்னேள்? உங்களுக்கு மனைவியா வரப் போறவளுக்கா நகை? அப்ப இவ, இதோ இந்த வசு உங்க மனைவியா வரலையா?"

"இல்லே."

"ஏன்?"

"என்னை ஏன் கேட்கறீங்க? அவளையே கேளுங்கோ."

"என்னடீ வசு? இவன் என்ன சொல்றான்...? கதை எப்ப இப்படி மாறிடுத்து?"

"அம்மா, நீ கொஞ்சம் பேசாம இரும்மா.. மிஸ்டர் அரவிந்தன் நாம நாளைக்கு மீட் பண்ணுவோம்..."

"ஓகே... ஆனா வசு, நீ இப்ப என்னை இக்கட்டான நிலையில் நிறுத்தியிருக்கே... உன் அம்மா அப்பாகிட்டே எதுவுமே இன்னும் சொல்லலியா?" என்று கேட்டான் அரவிந்தன்.

"இவ எதை என்னிக்கு எங்ககிட்டே சொல்லியிருக்கா... கண்ட கண்டவனுடைய கேஸ்களைப் பத்தி, யாரோ கேட்ட மாதிரி எங்ககிட்டே ஜம்பம் அடிச்சுப்பா... இந்த விஷயத்தைப் பத்தி மூச்சு விடலே!"

வசுமதி அம்மா அப்பா இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். பிறகு, "மிஸ்டர் அரவிந்தன்! என் அம்மா, அப்பா கிட்டே நானும் நீங்களும் கலியாணம் பண்ணிக்கப் போறோம்னு நான் என்னிக்குச் சொல்லியிருந்தேன். இன்னிக்கு அந்த முடிவு மாறிடுத்துன்னு சொல்ல? இவங்களா ஏதோ ஊகம் பண்ணிண்டு, அந்த ஊகம்தான்



நிஜம்னு நினைச்சுண்டிருந்தா தப்பு என்னோடது இல்லை." என்றான்.

"அப்போ இவன் கூட அங்கே இங்கேன்னு ஆயிரம் இடத்துக்கு அலைஞ்சு திரிஞ்சியே அதுக்கு என்ன அர்த்தம்?" என்றாள் சாரதா. பிறகு, அரவிந்தனைப் பார்த்து, "ஏம்ப்பா, நீ பெரிய படிப்பு படிச்ச பெரிய என்ஜினியரா இருக்கியே... ஒரு பொண்ணோட ஊரறிய சுத்திப்புட்டு அவளை நட்ட நடுத் தெருவில குப்பையைப் போடற 'மாதிரிப் போடத்தான் உனக்கு, காலேஜ்ல சொல்லித் தந்தாளா?" என்றாள்.

"இதுக்கு என்னால் பதில் சொல்ல முடியும், மாமி! ஆனா நான் சொல்லமாட்டேன்.. ஏன் தெரியுமா? எப்பவுமே ஒரு ஆம்பிள்ளை தான் ஒரு பொண்ணை ஏமாத்துவான்னு உலகம் நம்பிண்டு ஓடறது... ஒரு பொண்ணாலேயும் ஒரு ஆம்பிள்ளையை ஏமாத்த முடியும், ஏமாத்திண்டும் இருக்கான்னு உலகம் நம்ப ஆரம்பிக்கலே... நான் வரேன்,... மேற்கொண்டு ஏதானும் விசாரணை நடத்தணும்னா நீங்க உங்க பெண்ணையே விசாரியுங்கோ!"

மறுகணம் அரவிந்தன் விரைவாக வெளியேறினான்.

வசுமதி ஸ்தம்பித்துப் போய் நின்றாள். அவனை அவள் ஏமாற்றி விட்டாளா? இப்படிப்பட்ட எண்ணம் அரவிந்தனுக்கு எப்படி ஏற்பட்டது? அவள் சத்தியமாக அவனை ஏமாத்த நினைக்கவே இல்லை. உண்மை இப்படி இருக்கும் போது எப்படி அரவிந்தன் அபாண்டமாகக் குற்றம் சுமத்தலாம்?

அவள் இரண்டு இரண்டு படிகளாக விழுங்கி, இறங்கி காரை அடைந்தாள். அரவிந்தன் 'காரை ஸ்டார்ட் செய்யத் தயாராக இருந்தான்.

"அர்விந்த்!"

"என்ன வசு?"

"நீங்க என்னென்னவோ பேசிட்டீங்க!"

"ஒண்ணும் தப்பாப் பேசலையே?"

"நான்... நான் உங்களை ஏமாத்திட்டேனா?"

"ஒரு வாக்கு அளித்த பிறகு அதை மீறி நடந்தா அதுக்கு வேறு என்ன பெயர், வசு? நீ வக்கீல். ஏமாற்றல் இல்லேன்னா வேறே பெயர் சொல்லு..."

"அர்விந்த்... அர்விந்த்... நீங்க என்னைத் தப்பாப் புரிஞ்சுட்டிருக்கீங்க... ஓகே... இங்கே ரோட்லே பேச வேண்டாம்... நீங்க இப்ப வீட்டுக்குத்தானே போறீங்க? ஒரு அஞ்சு நிமிஷம் வெயிட் பண்ணுங்க.. உங்க கூடப் பேசணும்..."

"இனிமே பேசறதுக்கு ஒண்ணுமில்லே வசு... நாம ஃப்ரண்ட்ஸா இருக்கலாம்னு சொன்னே... இப்ப ஃப்ரண்ட்ஸாகவே விடை பெறுவோம்... முடிஞ்சா நாளைக்கு என்னை நகைக் கடைக்கு அழைச்சுட்டுப் போ... மாயாவுக்கு நான் நெக்லஸும் மோதிரமும் வாங்கலாம்னு இருக்கேன்."

கார் ஸ்டார்ட் ஆயிற்று.



மகள்: ரிப்பேர் பண்ணிட்டேன்.. எல்லா லைட்டும் எரியுதுன்னு எலக்ட்ரீஷியன் சொன்னார்... ஆனா இந்த 'டார்ச்' லைட் எரியலையே?

"அப்ப நான் வரக் கூடாதா உங்க வீட்டுக்கு!"

"யார் கூடாதுன்னா? நிச்சயமா வரலாம்... ஆனா முடிஞ்சு போன அத்தியாயத்தை நீ பரிசீலனை செய்ய வேண்டாம்!"

"நீங்கதானே என்னைக் குத்தம் சாட்டினீங்க... அதுக்கு பதில் சொல்ல வேண்டாம்?"

"நாட் நெஸஸரி, வசு... நீ உன்னையே ஏமாத்திண்டு, ஏதோ தியாகம் செய்யறதாகக் காட்டி, கடைசியில என்னையும் ஏமாத்திட்டே. பரவாயில்லே. உன்னை அடியோட மறக்க எனக்கு இப்ப ஒரு மாயா கிடைச்சிருக்கா... நாளுக்கு இருபத்து நாலு மணி நேரமும் நான் மாயாவைக் கவனிச்சுக்கறதில் கழிந்து விடும். நீயும் என்னை விட்டு முழுக்க முழுக்க மறைஞ்சு போயிடுவே!"

"ஓகே, அர்விந்த! ப்ளீஸ் யுவர்செல்ஃப்! ஆனா அன்னிக்கு நான் ஒண்ணு சொன்னேன்... அதுக்கு நீங்க எதிர்ப்பு தெரிவிக்கலே... நான் சொன்னபடி செய்து காட்டறேன்!"

"வீராப்பா ஏதாவது பேசி இருப்பே..."

"மறந்துட்டீங்களா, மிஸ்டர் அர்விந்த்! நான் அன்னிக்கும் வீராப்பா பேசலே. இன்னிக்கும் வீராப்பாப் பேசலே... உங்க கலியாணத்துக்கு வருவேன்... உங்க ரெண்டு பேரோடைய புதுக் குடித்தனத்தை ஆரம்பித்து வைப்பேன்... நீங்க எட்டி உதைச்சாலும் வெளியே போகாம, மாயாவைக் குணப்படுத்தும் முயற்சியில நான் அயராது உழைப்பேன்... நான் எவ்வளவு மனப்பூர்வமா உங்களை விரும்பினேன், உங்க நல்வாழ்வுக்காக யாரும் எடுக்க முடியாத முடிவை எடுத்தேன், உங்களுக்காகவே நான் என்னை, எப்படி அழித்துக் 'கொண்டேன் என்பதை நீங்க புரிஞ்சிக்கற வரைக்கும் நான் உங்களை விட மாட்டேன்! இது சத்தியம்!"

அரவிந்தன் அவளை ஏறிட்டுப் 'பார்த்தான். உறுதியின் ஜ்வாலை அவளுடைய கண்களில் கொழுந்து விட்டது.

மறுகணம் கார் கிளம்பி வேகமெடுத்து ஓடியது.

(தொடரும்)

வெளித் தோற்றத்துக்கு வீடு பழமையும், புதுமையும் கலந்து நன்றாகவே இருந்தது. வாசலில் பெரிதாகக் கோலம் போட்டிருந்தது. ஆ, கோலம் என்றால் என்ன என்பது கூட மறந்து போகிற மாதிரி நாம் ரொம்பத்தான் மாறிப் போய் விட்டோம் என்று எண்ணிக் கொண்டார் ராகவன்.

கதவைத் திறந்தது ஜெயா, ஜெயாவேதான். அவர் ஆதி காலத்தில் காதலித்த அந்த ஜெயா தான். கிழத்தின் வடிவங்க ளுக்கிடையிலும் அவரால் கண்டு கொள்ள முடிந்தது. ஆனால் ஜெயாவுக்கு அவரை அடையாளம் தெரியவில்லை.

"யார் நீங்கள்... எனக்குத் தெரியலையே. எங்கேயோ பார்த்திருக்கிற மாதிரி இருக்கு."

"உள்ளே வரலாமா, ஜெயா?"

அவளுக்குப் புரிந்து விட்டது என்பது முகத்தில் ஏற்பட்ட மாறுதலில் தெரிந்தது. தொண்டை அடைத்துக் கொண்டது. பேச்சு வரவில்லை.

ராகவன் அவளைப் பார்த்துச் சிரித்தவாறு நின்றார்.

"வாங்கோ" என்று தீனமான குரலில் அழைத்து விட்டு உள்ளே திரும்பினாள் ஜெயா.

"சிறேஷ்டடேர்ந்து லெட்டர் வந்ததா...?" என்று கேட்டவாறே அவளைத் தொடர்ந்த அவர், ஹாலில் போடப்பட்டிருந்த நாற்காலியில் சாவகாசமாக அமர்ந்து கொண்டார். ஜெயா தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

"வந்தது. உங்க பேரை எழுதலை. எதுக்காகன்னு புரிஞ்சிண்டுட்டேன்."

"என்னைத் தான் வேண்டாம்னுட்டே. என் பெண்ணையும் அப்படி சொல்லிடுவியா, ஜெயா?"

ஜெயாவின் கண்களில் நெடுநாளாகத் தேங்கியிருந்த கண்ணீர் இப்போது வெளியே கொட்ட ஆரம்பித்தது. ராகவன் பார்த்துவிடுவாரே என்று அவள் அதை மறைக்கவும் முயலவில்லை.

"உங்களோட அன்புக்கு நான் செஞ்ச துரோகத்துக்கு தண்டனை எனக்கு உடனடியாகக் கிடைச்சிருக்கு. அதுக்குப் பரிகாரமா என்னோட ஒரே பிள்ளையை நானே பலவந்தமா உங்க பொண்ணில சேர்த்திருக்கேனா, என்னைப் பார்த்தா இந்தக் கேள்வி கேக்கறேள்...?"

அவளுடைய விசும்பலில் அவர் ஆழக் கொண்டிருந்த வாஞ்சை நின்றது. ராகவனின் கண்களிலிருந்தும் இரு சொட்டுக் கண்ணீர் வழிந்தோடியது.

— x —

"நீயும் இத்தனை நாள் கிரிக்கெட் ஆடுறியே... அஜாருதீன் மாதிரி ஏதாச்சும் சாதனை பண்ணியிருக்கியாடா?"
"ஓ... பண்ணியிருக்கேனே... ஒரே ஆட்டத்தில் மூணு 'இஞ்சுரி'!"

— அ. வசந்தா



ஒருவர்: என்ன சார்... மூணாவது தடவையா படத்தைப் பார்க்க வந்திருக்கேன்னு இப்பத்தான் சொன்னீங்க... கதை என்னன்னு கேட்டா தெரியாதுங்கறீங்களே?"

மற்றவர்: "அட நீங்க ஒண்ணு... அதை தெரிஞ்சுக்கலாம்னு தானே விடாம வந்திட்டிருக்கேன்."

— ஆவந்தி ஹரி

# மோகினித் திருக்கோலம்

## 27. இரண்டில் ஒன்று

வர்மன் வந்ததும் சிந்து, தனது குதிரையில் ஏறிக் கொண்டாள். "அவசரம்! அவசரம்!" என்று குதிரையை தட்டி விட்டாள்.

"எங்கே போகிறோம்? சிந்து" என்றான் அவன்.

"நமக்கு காரியம் இல்லையா! நம் கெடு நாட்கள் வந்து கொண்டிருக்கின்றன" என்றாள் சிந்து.

இருவரும் முதலில் வழுதாவூரான் சத்திரத்திற்குச் சென்றார்கள். அங்கேதான் வர்மன் தன் உடமைகளை வைத்திருந்தான்.

"சீக்கிரம் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளுங்கள்! ஊரை விட்டுப் போகிறோம்!" என்றாள்.

"அதற்குள்ளேயா?" என்றான்.

சிந்து மறுமொழி சொல்லவில்லை.

வர்மன் எண்ணச் சுமையுடன் உள்ளே சென்றான். மனம் ஏன் அவ்வளவு கலக்கியது?

ஊரை விட்டுப் போகிறோம் என்பதாலா?

தந்தையை இன்னும் கண்டு பிடிக்க முடியவில்லை.

எப்படியும் அதற்குத் திரும்பி வரத்தான் வேண்டும்!

அவர் என்ன ஆனார் என்பதைத் தெரியாமல் ஊர் திரும்புவதா?

அதுதானே அவனது முக்கிய காரியம்?

ஆமாம்.

அது போகட்டும். இப்போது சில்லறையாக அவன் மனத்தை அரித்துக் கொண்டிருப்பது அந்த நாலு விழிகள்தான்.

ஒன்று செஞ்சகாவின் ஜோடி! மற்றொன்று மாதில்தாவின் ஜோடி!

அவைகளுக்கு என்ன சக்தி?

வண்டினம் போல் ரீங்காரமாக மனத்தை வளையமிடுகின்றன.

வேன்ஸான் எவ்வளவு தத்ரூபமாகச் சொன்னார்! பார்க்கும் அத்தனை கண்களும் காதல் என்று!

நடை முறையில் அத்தனை காதல்கள் இருப்பது சாத்தியமா?

அவருக்கென்ன? அவர் வெள்ளைக்கார வழக்கைப் பின்பற்றுபவர். என்ன வேண்டுமானாலும் சொல்லுவார்.

தனது பொருள்களைச் சேகரித்துப் பையில் போட்டு வெளியே வந்தான் வர்மன்.

இருவரும் வீதிகளைக் கடந்து மேற்குக் கோட்டைப் பக்கம் போனார்கள்.

கோட்டை வாயிலில் இருந்த தலையாரி தகராறு செய்தான்.

அவர்களை வெளியே அனுப்புவதற்கு உத்தரவு வேண்டும் என்று கூறினான்.

பதாம் தூப்ளேயின் உத்தரவை எடுத்து வர்மன் காட்டினான்.

குவர்னர் துரை அல்லது துபாஷி ரங்கப் பிள்ளை உத்தரவு வேண்டும் என்றான்.

இருவரும் சிறிது நேரம் சஞ்சலப்பட்டு விட்டு பிறகு சத்திரத்திற்கே அன்றைய இரவைக் கழிக்கத் திரும்பினார்கள்.

காலையில் மீண்டும் புறப்பட்டு, துபாஷி ஆனந்த ரங்கப்பிள்ளை வீட்டுக்குப் போய்ச் சேர,

அவர் காலையில் பழையது சாப்பிட்டு விட்டு குவர்னர் துரை மாளிகைக்கு போய் விட்டார் என்று செய்தி வந்தது.

அப்பால் குவர்னரைப் பார்த்து விட்டு அவர் நேராக அவரது பாக்குக் கிடங்குக்கு வருவார் என்பது அறிந்து,

நேரே கிடங்கு இருக்கும் வீதியில் போய் நின்றார்கள்.

வெயில் ஏறிக் கொண்டிருந்த தருணத்தில் சிவிகை ஒலி கேட்க,

இருவரும் கிழக்கு நோக்கிப் பார்க்க,

பல்லக்கு ஒன்றில் ஆனந்த ரங்கப் பிள்ளை சமத்காரமாய் உட்கார்ந்து வந்தார்.

இரு பக்கமும் தீவர்த்திகளும், சாமரமும் பிடித்த ஆட்கள் வந்தார்கள்.

பாக்கு கிடங்கு வாசலில் பல்லக்கு நிற்க, ஆனந்த ரங்கப்பிள்ளை கீழே இறங்கி கிடங்குக்குள் போனார்.

அவ்வளவில், வர்மனும், சிந்துவும் சென்று காரியஸ்தர் வழியாக சொல்லி அனுப்ப,

சிறிது நேரத்தில் அவர் திரும்பி வந்து உள்ளே அழைத்துப் போனார்.

பாக்குக் கிடங்கு என்கிற வகையில் பச்சைப் பாக்கின் பகுமையான துவர்ப்பு நெடி உள்ளே அடித்தது.

குவர்னரிடம் துபாஷி (மொழி பெயர்ப்பாளராக ஆரம்பித்த இந்த பதவி பின்னர் அந்தரங்கக் காரியதரிசி அளவுக்குப் படிப் படியாக மாறி விட்டது) யாக இருந்த ரங்கப்



இருபக்கமும் இருவர் விசிறி வீசிக்கொண்டிருந்தார்கள்.

நாற்பத்திரண்டு வயது நிரம்பிய ரங்கப்பிள்ளை பார்ப்பதற்கு ஒரு யௌவன இளைஞர் போல் வீற்றிருந்தார்.

தலையில் கட்டியிருந்த பாகை இன்னும் கலைக்கப்படவில்லை. நெற்றியில் வைணவ நாமத்தின் ஸ்ரீசூர்ணம் தான் பெரும்பாலும் புலனாயிற்று.

கறு கறுவென்று நீள மீசை.

ஸ்ரீ வேணுகோபாலன்

பிள்ளை தாமே ஒரு நல்ல வர்த்தகராகவும் இருந்து வந்தார்.

பல தேசங்களிலிருந்து பொருட்களை வாங்கி விற்றதும் அல்லாமல், பல தேசங்களுக்குப் பொருட்களை ஏற்றுமதியும் செய்து கொண்டிருந்தார்.

'ஆனந்தப் புரவி' என்கிற பெயரில் 'சொந்தக் கப்பலும் இருந்தது.

உள்ளே பெரிய கூடத்தில் மாக்கோலம் போடப்பட்டு சித்திர சாலை போல இருந்தது. மேலே விதானத்தில் திருமால் நாகம் மேல் சயனித்திருக்கும் திருக்கோலம் நீலம், வெள்ளை, பச்சை, மஞ்சள், ஆகிய வர்ணங்களில் தீட்டப்பட்டு இருந்தது. ஓரத்தில் குறு நாகப் பட்டை போன்ற தங்க முலாம் பூசப்பட்ட ஜிகினாத் துணுக்குகள் மின்னிக் கொண்டிருந்தன.

ஆனந்த ரங்கப்பிள்ளை திண்டு போட்டு அதில் அமர்ந்திருந்தார்.

காதில் இரு பெரிய வளையங்கள் தொங்கின.

பூசினாற் போல மேனி.

சட்டை போட்டு அதற்கு மேல் அங்கி தரித்து இடது விலாப் பக்கம் அதன் நுனிகளைக் கட்டியிருந்தார்.

அவர்கள் போன போது இடுப்புப் பட்டையைக் கழற்றி, அந்த பதவி கௌரவத்தைக் காண்பிக்கும் உடைவாளை எடுத்து கீழே பாய் மீது வைத்தார்.

வர்மனும், சிந்துவும் உள்ளே வந்ததும் ஒரு முறை ஏறிட்டுப் பார்த்து, 'உட்காருங்கள்' என்றார்.

உள்ளே நல்ல குளிர்ச்சியாக இருந்ததுடன் இதமான வெளிச்சமும் இருந்தது.

வந்த காரணத்தை வர்மன் கூறினான்.

ரங்கப்பிள்ளைக்குச் சிறிதே மாறு கண் இருந்தது. அவர்களை உற்றுப் பார்க்கிறாரா என்று அடிக்கடி வர்மனுக்கு உதறல் ஏற்பட்டது.

"எங்கே வந்தீங்க? எங்கே போறீங்க?" என்று கேட்டார்.

தந்தையைத் தேடி வந்ததாகவும், தந்தை கிடைக்காததால் திரும்பப் போவதாகவும் கூறினான்.

சிந்து தனது தாரத்து உறவு என்று கூறினான்.

"நல்லது தம்பி. முறி எழுதித் தரேன்" என்று ரங்கப்பிள்ளை சொல்லிவிட்டு, லிகிதம் எடுக்கச் சாய்ந்ததும்,

வர்மனுக்குப் பிடிபடாத எதுவோ தோன்றியது.

மேலே அவர் கேட்ட கேள்விக்கு மதாம் தூப்ளேயைப் பார்த்த விவரத்தை வர்மன் கூற,

ரங்கப்பிள்ளை அதிக ஆர்வம் உள்ளவராய், மதாம் என்னென்ன பேசினார்கள், என்னென்ன செய்தார்கள் என்று விவரமாக கேட்டு,

வர்மன் கார்வேட் ராஜாவிடம் போவதையும், மதாம் தூப்ளே அந்த ராஜாவுக்குக் கடிதம் எழுதியிருப்பதையும் தெரிந்து கொண்டார்.

கடுதாசி ஒன்றை எடுத்து மைக்கூடு போறவால் உத்தரம் ஒன்று எழுதி அதற்கு தமது முத்திரை பதிப்பித்து அவர்களிடம் கொடுத்தார்.

தற்போதைய ராஜாவிடம் ரங்கப்பிள்ளை பழக்கம் அனதில்லை என்றும், அதற்கு முந்தைய ராஜாவிடம் மிக அன்னியோன்யமாகப் பழகியதாகவும் ரங்கப்பிள்ளை தெரிவித்தார்.

பின்னர் அவர்களுக்கு விடை கொடுக்க, இருவரும் புறப்பட்டு வெளியே போனார்கள்.

அன்று சாயந்திர வேளையில் தமது 'சொந்த லிகிதம்' என்கிற 'தினப்படி சேதிக் குறிப்பு' எழுதும் போது,

... வருஷம் புரட்டாசி ஆதிவாரம் என்று ஆரம்பித்து,

'காலமே பழயது சாப்பிட்டு துரையவர்கள் அழைத்ததன் பேரில் அவரிடம் போன இடத்தில்....' என்று தொடங்கிய குறிப்பில்

'அப்பால் பாக்குக்கிடங்கில் வந்து சிரமப் பரிகாரம் செய்யற வேளையில் ஒரு ஆணும், பெண்ணும் வந்து என்னைக் கண்டு மேற்கு வாசல் வழியே போவதற்கு உத்தரம் வேண்டும் என்று கேட்டார்கள். அவர்களை விசாரித்த போது மதாம் தூப்ளே திருப்பதி பணத்திற்கு ஆசைப்பட்டு கார்வேட் ராஜாவுக்கு கடிதம் எழுதியிருப்பது தெரிய வந்தது.

. கணவனுக்குத் தெரியாமல் மதாம் தூப்ளே செய்யும் காரியங்களுக்குக் கணக்கு வழக்கு கிடையாது. பணம் ஒன்றே குறியாக வைத்து எத்தனையோ திரிசமன் காரியங்கள் செய்து வருகிறார். இன்னும் என்னவெல்லாம் செய்து துரையவர்களுக்கு அபகீர்த்தி ஏற்படுத்தப் போகிறாரோ..." என்று எழுதினார்.

உத்தரம் வாங்கி கோட்டை வாசலைக் கடந்த பிறகு,

"வர்மரே! நாம் தெற்கே போகிறோம்!" என்றாள் சிந்து.

"பொம்மராஜபாளையம் போக வேண்டாமா?" என்றான் வர்மன் திடுக்கிட்டு.

"இப்போது அதற்கு அவசரம் அல்ல." என்றாள் சிந்து.

"ஐயோ! செஞ்சுக்காவின் கதி!" என்றான் வர்மன்.

சிந்து திரும்பி அவனை தீர்க்கமாக ஒரு முறை பார்த்தாள்.

**"ஏன் என் கதியைப் பற்றி நீங்கள் நினைக்கவில்லையா?" என்று குரல் தாழ்ந்து கேட்டாள் சிந்து.**

அவள் கேட்ட தொனியின் அத்தியந்த ஸ்பரிசம் அவன் மன ஆழங்களைத் தொட்டது.

"சிந்து!" என்று சொல்லி நிறுத்தினான். அவன் கண்கள் கலங்கி இருந்தது.

"ஏன், என்னிடம் இப்படிக் கேட்கிறீர்கள்? நான் ஏதாவது தப்பிதம் செய்து விட்டேனா...?"

துடித்துக் கொண்டு கேட்டாள் அவள்.

அவன் பேசவில்லை.

"சிந்து! நான் எல்லாவற்றுக்குமே புதியவன். எங்கேயோ ஒதுங்கிப் போன ஒரு சீமையில் ஒரு குக்கிராமத்தில் இருந்தவன் நான்! திடீரென்று என் கண்களைப் பெரிதாக்கி விட்டது போல தெரிகிறது. எல்லாமே எனக்குப் புதுமையாகத் தோன்றுகின்றன. யார் எதை சொன்னாலும் ஏற்றுக் கொள்கிறேன். எனது தென் சீமை குக்கிராம வாழ்க்கையிலிருந்து இங்கே எல்லாமே மாறுபட்டு தோன்றுகிறது. அதில் எப்படி எப்படி நான் நடந்து கொள்ள வேண்டும என்று முறைமை எனக்குத் தெரியாமல் போகலாம். அதை நீங்கள் எனக்குக் கற்றுக் கொடுக்கலாம், சிந்து..." என்றான் அவன்.

சிந்துவின் முகத்தில் குறுநகை பூத்தது.

"வர்மரே! உங்கள் வெகுளி வெகுவாக என் மனத்தைக் கவர்கிறது. எதையும் பற்றி கவலைப் படாதீர்கள்! எல்லாவற்றையுமே நீங்கள் சமமாகப் பார்க்கிறீர்கள். எல்லாவற்றிலுமே சமமாக அன்பு செலுத்துகிறீர்கள். தப்பிதமல்ல! ஆனால் ஏதாவது ஒன்றில்

"உங்க படத்துல கிராமத்து வாசனை அதிகமா இருக்கே."

"இருக்காதா பின்னே. கிராமத்துல இருந்த நிலத்தையெல்லாம் வித்து எடுத்த படமாச்சே."

—ஏ. சுகுமார்.



உங்கள் அச்சத்தைப்
போக்குகிறோம்- நிச்சயமாக!
முதலீட்டை நீங்கள்
நிச்சயமாகத் திரும்ப
அடைவதற்கு எமது
உத்திரவாதம்:
பாங்க் ரொக்கப் பத்திரம் அதனால்தான்,
இந்து உங்களுக்கு உகந்தது!

**18%**
வட்டி அத்தோடு,
வெள்ளிப் பரிசும்
கூட!

நம்பி ஒப்படைத்த உங்கள் சேமிப்புக்கு வங்கி ரொக்கப் பத்திரங்கள் வாயிலாக உத்திரவாதம் தந்து உறுதியளிக்கிறது—இந்து.

நிதி விவகாரங்களில் வெகு நாணயமான வார்ப்பு இந்து என்ற உண்மையை நிரூபிக்கும் தன்னிகரற்ற, உன்னதமான உத்திரவாதம் இது. தமது பணத்தையும், மற்றவர் நிதியையும், நாணயமாயும் நல்ல பலன் தரும் வகையிலும் நிர்வகிக்கும் நிபுணத்துவமே இந்துவின் இந்த தைரியத்துக்கு மூலகாரணம்.

உங்களுக்கு இலாபகரமான பலவற்றைச் செய்யவல்லது—இந்து.




## இந்து பைனான்ஷியர்ஸ் (Regd.)

நிர்வாக அலுவலகம்
H. O. 155, வடக்கு உஸ்மான் சாலை
தி. நகர், சென்னை-600 017. போன் : 445529

கிளைகள் :

155, வடக்கு உஸ்மான் சாலை, தி நகர்,
சென்னை-600 017. போன் : 445529

32, ரங்கநாதன் தெரு, தி. நகர்.
சென்னை-600 017. போன் : 447888

220, என். எஸ். ஸி. போஸ் ரோடு.
சென்னை-600 001. போன்: 25901

24, வடக்கு மாடவீதி, பூவிருந்தவல்லி.
சென்னை-600 056. போன் : 69566

194, வக்கீல் புதுத் தெரு, மதுரை-625 001
போன்: 34940 & 31351

106, பெரிய தெரு, திருவண்ணாமலை-606 601
போன்: 681

22, வணிகர் தெரு, காஞ்சிபுரம்-631 201
போன்: 3048

41, தொப்பா முதலியார் தெரு,
பெங்களூர்-560 001. போன் : 579585

UIPC IF 215

சற்று அதிகமாக, ஆர்வமாக, ஆழமாக அன்பைச் செலுத்த வேண்டியிருக்கும். அப்போதுதான் 'நான்,' 'தனது' என்பதெல்லாம் ஏற்பட்டு 'குடும்பம்', 'பந்தம்', 'குலம்' எல்லாம் தோன்ற ஆரம்பிக்கும்... என்று சொல்லி நிறுத்தினாள் அவள்.

அவன் கண்கள் படபடத்தன.

"சிந்து நீங்கள் சொல்வது மனதில் பளீர் என்று பாய்கிறது. அதன் அர்த்தம் புரிவது போல் நெருடுகிறது. வேன்லான் கூடச் சொன்னார், அத்தியந்தமான ஆன்ம அன்பு ஒருவர் மீதுதான் பாயுமென்று. அதை இந்தக் கணத்தில், இப்போதே, உங்களிடம் உணர்ந்தேன். சிந்து... சிந்து... உங்கள் நேசம் என் மீது ஆன்ம பூர்வமாக விழுந்திருக்கிறது. என் நேசம்... மேற்பரப்பில்லாது ஆழத்திலிருந்து வரும் என் நேசம், நிச்சயம் இதோ இதோ தங்கள் மீது தான் பாய்கிறது. சிந்து...

அவன் கண்கள் கலங்கி மங்கின. குதிரையை விட்டுக் கீழே குதித்தான்.

சிந்துவின் குதிரை அருகே சென்றான்.

அவள் கைகளை ஏந்தி வாங்கினான்

பிரமித்து இரு பளிங்குச் சுடர் போல் அவள் கண்கள் அவன் மீது லயிக்க,

அவன் கண்களில் ஆனந்த மிகுதியால் பிரவாகம் வழிந்தது.

அந்த நிசப்த இன்ப வேளையில் அந்த மனோகரக் காட்டு வழித்தடத்தில் இருவர் உள்ளங்களும் களங்கமில்லாமல் ஒன்றை ஒன்று தழுவின. உச்சி முகர்ந்தன.

இருவருக்குமே பிரமை தட்டிய விழிகள் தான் அப்போது.

ஒருவரை ஒருவர் பார்த்து லயித்தார்கள்.

அவள் குதிரை மீதும்,

அவன் பூமி மீதும்!

ஒருவர் கண் வழியே ஒருவர் காலம் காலமாய்ப் பிரயாணமாகி யுகங்கள் கடந்து அந்த அறைக்குள் நுழைந்து பிரபஞ்சம் பிறப்புக்கு முன் இருந்த ஒன்றேதான் நாங்கள். இங்கே தூலத்தில் இரண்டாக இருக்கிறோம் என்று நினைத்தார்கள்.

திடீரென்று ஒரு குரல் கேட்க, பிரமைகள் சற்று தயங்கியவாறு கலைந்தன.

"வர்மரே! ஏறுங்கள்!" என்றாள் சிந்து.

"எது வரை போகிறோம் சிந்து!"

"தெற்கே, புதுக் கோட்டை சமீபம் வரை! ஒரு மாபெரும் தருணம் அங்கே காத்திருக்கிறது. செய்தி வந்திருக்கிறது" என்றாள் அவள்.

"என்ன!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் வர்மன்.

"ஆமாம்!" உடன்படிக்கைக் குழு கடைசித் தீர்மானம் எடுக்க நேரம் நெருங்கிவிட்டது. இந்தத் தீர்மானம் நமது எல்லோரது பிரச்னைகளையும் தீர்த்து வைக்கப் போகிறது!" என்றாள் சிந்து.

அவளது நம்பிக்கையைக் கண்டு வர்மன் ஆச்சரியப்பட,

மீண்டும் அந்தக் குரல் காட்டு விளிம்புகளில் ஒலித்தது.

(தொடரும்)

# நாவின் சுவையிருக்கும் வரை பி ஆர் நெய் நினைவிருக்கும்!

"நான் எப்பவுமே உபயோகிக்கிறது **பி. ஆர்.** நெய்தான். காரணம், என் குடும்பத்திலே எல்லாருக்குமே **பி. ஆர்.** நெய்யோட மணமும் சுவையும் தான் பிடிக்கும்.

எங்கம்மா காலத்திலுருந்தே **பி. ஆர்.** நெய்யோட தரமும சுவையும் எங்க குடும்பப் பழக்கமா யிடுச்சு."

விநியோகஸ்தர்கள்:
பி. ராமலிங்கம்
மாதுங்கா,
பம்பாய்-400019
போன்: 472077

ஸ்ரீ இராமுலு ஸ்டோர்ஸ்
332 காந்தி சாலை.
காஞ்சிபுரம்

வாய் மணக்கும் கை மணக்கும்— **பி. ஆர்** நெய்






---

ஏன் கடவுளை தியானம் செய்ய வேண்டும்?
ஏன் சிராத்தம் செய்ய வேண்டும்?

ஒருவன் ஆன்மீக பாதையில் இறங்கியவுடனே முன்பு நிர்ணயிக்கப்பட்ட விதி பின்னுக்கு நழுவத் தொடங்கி விடுகின்றது. ஒரு புதிய காரணம் வந்து விடுகின்றது (அல்லது கர்ம சக்தியை விட வலிமை கொண்ட தெய்வ சக்தியின் உதவி கிடைக்கிறது.) — ஸ்ரீ அரவிந்த மகரிஷி

சிராத்தத்தின் நோக்கம் ஆன்மாவை இன்னும் மண்ணுலகுடனும் பிராண உலகங்களுடனும் பற்றுக் கொண்டிருக்கச் செய்யும் அதிர்வுகளைத் தொலைத்து விட்டு துரிதமாக சைத்திய லோகம் சென்று அமைதி பெறுவதற்கு உதவுவதே.
— ஸ்ரீ அரவிந்த மகரிஷி

மேலும் பயனுடைய சிராத்த தினத்தன்று எங்கள் ஸ்வீட் காரவகைகளை வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**இனிப்பு:-** குங்குமப்பூ பாதாம் அல்வா, குங்குமப்பூ கோதுமை அல்வா, குங்குமப்பூ ஜாங்கிரி முதலியன.

**காரம்:-** கைமுறுக்கு, மினி தவடை, தட்டை, தேன்குழல், வாழைக்காய் வறுவல் முதலியன.

**திருமண வைபவங்களுக்கு:** சீர் முறுக்கு, திரட்டுப்பால், அதிரசம், பருப்புத்தேங்காய், முள்ளுத் தேன்குழல் ஆகியவை தயாரித்துத் தருகிறோம்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் அண்ட் ஸ்நாக்ஸ்**

24, இரண்டாவது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு - 20. போன்: 412557

காமதேனு சிறப்பங்காடி தேனாம்பேட்டை.

# பண்டாரி-ஜியா பேச்சு வார்த்தைகள்

கி.ராஜேந்திரன்

இந்தியா — பாகிஸ்தானிடையே நல்லுறவுவளரவேண்டும்என்பதற்காகநமது அயல் நாட்டுக் காரியதரிசி ரோமேஷ் பண்டாரியை பாகிஸ்தானுக்கு அனுப்பி வைத்தார் பிரதமர் ராஜீவ்காந்தி. பண்டாரியை வரவேற்று அவருடன் சற்றுநேரம் பேசினார் ஜியா.

ஜியா: வாருங்கள் மிஸ்டர் பண்டாரி, ராஜீவ் சுகமா? ஸோனியா சௌக்கியமா? முப்படைத் தளபதிகள் நலம்தானே? உங்கள் ராணுவ உபகரணங்கள் எல்லாம் எப்படி இருக்கின்றன?



பண்டாரி: எல்லாரும் சௌக்கியம்தான். பீரங்கிகள் துப்பாக்கிகள் எல்லாம் எண்ணெய் தடவித் துடைத்துப் பளபளவென்று எப்போதும் தயார் நிலையில் சுத்தமாக வைக்கப்பட்டுள்ளன.

ஜியா: பார்த்தீர்களா, பார்த்தீர்களா! நாம் உண்மை நண்பர்களென்றால் இப்படி நீங்கள் தயார் நிலையில் இருக்கலாமா? ராணுவத் தளவாடங்களைத் துருப்பிடிக்க அனுமதிக்க வேண்டாமா?

பண்டாரி: அதெப்படி முடியும்? நீங்கள் புதிது புதிதாக அமெரிக்காவிடமிருந்து நவீன ராணுவத் தளவாடங்களைப் பெற்றுக் குவித்துக் கொண்டிருக்கிறீர்களே!

ஜியா: பெற்றால் என்ன, குவித்தால் என்ன? அவையெல்லாம் ஆப்கானிஸ்தானை ஆக்கிரமித்துள்ள ருஷ்யாவை எதிர்த்துத்தானே?

பண்டாரி: அப்படிச் சொல்கிறீர்கள். ஆனால் அவை இந்தியாவுக்கு எதிராகப் பயன்படாது என்பது என்ன நிச்சயம்?

ஜியா: அவை இந்தியாவைத் தாக்கப் பயன்படாது என்ற உறுதிமொழியைத்தான் பல தடவை தந்திருக்கிறோமே?

பண்டாரி: ஆனால் சரித்திரம் வேறுவிதமாகச் சொல்கிறதே! இந்தியா பாகிஸ்தான் போர்கள் ஒவ்வொன்றிலும் அமெரிக்க ஆயுதங்களைப் பாகிஸ்தான் பயன்படுத்தியிருக்கிறதே!

ஜியா: தாக்கப் பயன்படுத்தப்படமாட்டா என்றுதானே சொன்னோம்? போர் ஆரம்பித்த பிறகு எதிர்த் தாக்குதல் நடத்தப் பயனாகாது என்று கூறவில்லையே? எங்களாலோ அல்லது உங்களாலோ ஏதோ ஒரு விதத்தில் போர் ஆரம்பமாகி விடுகிறது என்றால் அப்போது நீங்கள் எங்களைத் தாக்கினால் நாங்கள் சும்மா இருக்க முடியுமா? அமெரிக்க ஆயுதங்களை அப்போது எதிர்த் தாக்குதலுக்குப் பயன்படுத்துவோம்.

பண்டாரி: ஆக மொத்தம், இந்தியாவுக்கு எதிராக இந்த அமெரிக்க ஆயுதங்கள் பயனாகும் என்பது உறுதியாகிறது. எனவேதான் ஆட்சேபிக்கிறோம்.

ஜியா: ஆட்சேபிக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லையே. தாராளமாய் ஆட்சேபியுங்கள். ஆனால் மிஸ்டர் பண்டாரி, பொருளாதாரச் சீர்குலைவிலிருந்து உலகத்தையே நான் காப்பாற்றி வருகிறேன் என்பது உங்களுக்குப் புரியவில்லையே — அதுதான் எனக்கு வருத்தமளிக்கிறது!

பண்டாரி: அதெப்படி?

ஜியா: ராணுவத் தளவாட உற்பத்தி நின்று போனால் அமெரிக்கப் பொருளாதாரமே சீர்கெட்டுப் போகும். டாலர் பொருளாதாரம் சீர்குலைந்தால் உலகப் பொருளாதாரமே ஆட்டம் கண்டு போகும். எனவே இந்தியா கூட அமெரிக்காஅளிக்க முன்வரும் ஆயுத உதவியை ஏற்று உலகப் பொருளாதாரத்தைப் பலப்படுத்தலாம்.

பண்டாரி: அழகுதான். உலகப் பொருளாதாரத்தைப் பலப்படுத்த இந்தியாவும் பாகிஸ்தானும் போரிட்டுப் பல்லாயிரக் கணக்கில் ராணுவ வீரர்களும் ஒரு பாவமும் அறியாத மக்களும் அழிய வேண்டுமா? உலகப் பொருளாதாரத்தை நிலை நிறுத்த நமது பொருளா

தாரத்தைச் சீர்குலைக்க வேண்டுமா?

ஜியா: உங்கள் பொருளாதாரம் எப்படிச் சீர்கெடும், மிஸ்டர் பண்டாரி? என் போக்குக் காரணமாக நீங்களும் பிரிட்டன், ஃபிரான்ஸ் போன்ற பல நாடுகளிலிருந்து ஆயுதங்களைப் பெற்றால் அவற்றுக்கான கமிஷன் ஸ்விஸ் பாங்குகளில் நெம்பர் அக்கவுண்டில் போடப்படும் அல்லவா? அப்போது உங்கள் பொருளாதாரம் செழிக்கத்தானே செய்யும்?

பண்டாரி (நெளிந்து): நான் சில பல தலைவர்களுடைய தனிப்பட்ட சொந்தப் பொருளாதாரத்தைப் பற்றிப் பேசவில்லை. நாட்டின் பொருளாதாரத்தைப் பற்றிக் கூறுகிறேன்.

ஜியா: நாட்டின் பொருளாதாரம் தலைவர்களின் பொருளாதாரச் செழிப்பைச் சார்ந்து நிற்பதுதானே? தலைவர்களின் பொருளாதாரம் சரியாக இல்லை என்றால் அவர்கள் தேர்தலில் எப்படி ஏராளமாய்ச் செலவழித்து வெற்றிபெற முடியும்? தேர்தலில் வெற்றி பெற்றுப் பதவிக்கு வராமல் நாட்டின் பொருளாதாரத்தை அவர்களால் எப்படி வளர்க்க முடியும்?

பண்டாரி: அல்லது உங்களைப் போல், ஒரு நபர் மட்டுமே தேர்தலில் நிற்கலாம்; அவருக்கு மட்டுமே அனைவரும் வோட்டுப் போடலாம்' என்ற புதுமை ஜனநாயகத்தை இந்தியாவும் கடைப்பிடிக்க வேண்டும். தேர்தல் செலவே இருக்காது!

ஜியா: ஆகா! ஜோக் அடிக்கிறீர்கள்! ஒன்று கவனத்தில் வையுங்கள்! எனது ஒரு நபர் ஜனநாயகம் காரணமாகத்தான் உங்கள் மக்கள் ஆட்சிக்குப் பெருமதிப்பு! இல்லையெனில் உங்கள் நாட்டின் தேர்தலை உலகம் இவ்வளவு தூரம் கவனித்துப் பிரமாதப் படுத்திப் போற்றப் போவதில்லை. எனவே நீங்கள் எனக்கு நன்றி கூற வேண்டும்!

பண்டாரி: ரொம்ப நன்றி! ஆனால் உங்கள் ஒரு நபர் ஜனநாயகம் காரணமாக மக்கள் கருத்து உங்கள் ஆட்சியில் பிரதிபலிக்கப்படுவதில்லை. அவர்களைக் கேட்டால் உங்களுடைய இந்த ஆயுதக் குவிப்பை வேண்டாம் என்று சொல்வார்கள்!

ஜியா: கரெக்ட்! அதற்காகத்தான் நான் அவர்களை எதுவுமே கேட்பதில்லை! பாவம் பாமர ஜனங்கள். அவர்களுக்கு என்ன தெரியும்?

பண்டாரி: அவர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ, எங்களுக்குத் தெரிகிறது — நம்மிடையே நட்புறவு நிலவி நீங்கள் ஆயுதக் குவிப்பையும் நிறுத்தினால் நாங்கள் ராணுவத்துக்குச் செலவு செய்யும் எட்டாயிரம் கோடி ரூபாய் கணிசமாக மிச்சப்படும். அதைத் தொழில் முன்னேற்றத்துக்குப் பயன்படுத்தலாம். எங்கள் பட்ஜெட் பற்றாக்குறை ஒரே வீச்சில் தீர்ந்து போகும். விலைவாசி உயராது. வேலையில்லாத் திண்டாட்டம் இராது. ஏழைமை ஒழிந்து...

ஜியா: யா அல்லா! இப்படியெல்லாம் அசட்டுத் தனமாக யாராவது கணக்குப் போடுவார்களா?

பண்டாரி: ஏன்? ஏன்? நாட்டில் சுபிட்சம் நிலவ வேண்டும் என்று நினைப்பதா அசட்டுத் தனம்?

ஜியா: இல்லையா, பின்னே? தேசத்தில் சுபிட்சம் நிலவினால் எல்லோரும் சோம்பேறிகளாகப் போவார்கள். மது, போதை மருந்து போன்றவற்றுக்கு அடிமையாவார்கள். பாலுறவு வியாதிகள் பரவும். இருதய நோய் அதிகரிக்கும்... சுபிட்சத்தினால் அமெரிக்கா படுகிற அவதிகள் தெரியாதா? இன்னொன்று. இப்போது வறுமை இருப்பதால்தானே ராஜீவ் அதைச் சாதிப்பேன் இதைச் செய்வேன் என்று வாக்குறுதிகளை அள்ளி வீச முடிகிறது? சுபிட்சம் பெருகினால் எப்படி எதிர்பார்ப்புக்களை வளர்க்க முடியும்? என்ன வாக்குறுதிகளைத் தர இயலும்?

பண்டாரி: ஆக மொத்தம் ராஜீவ் சில தேர்தல் வாக்குறுதிகளைத் தர வசதி பண்ணுவதற்காகத்தான் நீர் அணுகுண்டுத் தயாரிப்புக்கும் முயன்று வருகிறீர்களாக்கும்!




ஜியா: சந்தேகமென்ன? இந்திராகாந்தி போக்கரான் பாலைவனத்தில் அணுகுண்டு வெடித்ததைச் சொல்லிச் சொல்லியே நான் என் நிலைமையை ஸ்திரப்படுத்திக் கொண்டிருக்கிறேனல்லவா? அதுபோல் ராஜீவுக்கும் பிரதியுபகாரமாக நான் வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தர வேண்டாமா?

பண்டாரி: இதற்காக உலகயுத்தமே மூண்டு விடக் கூடிய அபாயத்தைத் தோற்றுவித்து வருகிறீர்களே?

ஜியா: அல்லா! இது என்ன கூறுகிறீர்கள்! உலக யுத்த அபாயத்தைத் தவிர்த்து வருகிறேன் நான். ருஷ்யா ஆப்கானிஸ்தானத்தைப் பிடித்துக் கொண்டது. அடுத்துப் பாகிஸ்தானைக் கபளீகரம் பண்ண எண்ணினால் அமெரிக்கா சும்மா இருக்குமா? நேச நாடாகிய பாகிஸ்தானுக்கு உதவ உடனே போரில் இறங்காதா? உலக யுத்தம் மூளாதா? அதைத் தவிர்க்கத்தான் நான் அமெரிக்கா வர வேண்டாம் அமெரிக்க ஆயுதங்கள் மட்டும் வந்தால் போதும் என்று தருவித்துக் குவித்து வருகிறேன். இதற்காக உலகமே எனக்கு நன்றி செலுத்த வேண்டும்!

பண்டாரி: உலக நாடுகளின் நன்றி கிடைக்காவிட்டாலும் அமெரிக்காவின் நன்றி உங்களுக்குக் கிடைத்துக் கொண்

டிருக்கிறது. இந்தியா நிச்சயமாக இந்த ஆயுதக் குவிப்புக்காக உங்களுக்கு நன்றி தெரிவிக்க முடியாது. கண்டனம்தான் தெரிவிக்கலாம்.

ஜியா: அங்கேதான் தவறு செய்கிறீர்கள். யோசித்துப் பாருங்கள். ஏற்கெனவே ஆப்கானிஸ்தானை ஆக்கிரமித்துள்ள ருஷ்யா நாளை பாகிஸ்தானையும் விழுங்கி ஏப்பம் விட்டுவிடுகிறது என்றால் அதன் அடுத்த இலக்கு எதுவாக இருக்கும்? இந்தியாதானே? எனவே இந்தியாவை ருஷ்யா தனதாக்கிக் கொள்ளாமல் தடுத்து வருவதே நான்தான். எனவே இந்தியர்கள் எல்லாம் எனக்கு நன்றி செலுத்தியே ஆக வேண்டும்!

பண்டாரி: மிஸ்டர் ஜியா! எல்லாவற்றுக்கும் ஏதோ ஒரு பதிலைச் சொல்லி ஆளைக் குழப்புகிறீர்கள். ஆனால் நல்ல வேளையாக உங்கள் பதில்கள் எதுவும் சரியில்லை என்று புரிந்து கொள்ளும் அளவுக்கு எனக்கு இன்னும் சிந்தனைத் தெளிவு இருக்கிறது.

ஜியா: கொஞ்ச நஞ்சம் பாக்கியிருக்கும் அந்தத் தெளிந்த சிந்தனையைப் பயன்படுத்தி ஒரு விஷயத்தை யோசியுங்கள்! நான் இப்படி நடந்து கொள்வதால்தான் உங்கள் நாட்டு மக்களும் ராணுவத்தினரும் விழிப்புணர்வுடன் சுறுசுறுப்பாய் இருக்கிறார்கள். இல்லாவிட்டால் அழுதுவடிவார்கள். ஏன், உங்களையே எடுத்துக் கொள்ளுங்களேன்! நீங்கள் எதிர்பார்க்கிறபடி நான் நடந்து கொண்டு விட்டால் அப்புறம் உங்களுக்கு என்ன வேலை? வேலையே இல்லாமல் ஒருவரை எதற்கு வைத்துக் கொண்டிருப்பது என்று உங்களுக்குச் சீட்டுக் கிழிந்தாலும் கிழிந்து விடும்!

பண்டாரி (பதறி): சரி சரி, நான் ராஜீவுக்கு என்ன சொல்லட்டும்? வெளியே காத்திருக்கும் நிருபர்களிடம் என்ன கூறட்டும்.

ஜியா: தெரியாதா என்ன? வழக்கமான கதைதான்! நாம் அண்டை நாட்டுடன் நட்புறவை வளர்ப்பதையே' குறிக்கோளாகக் கொண்டிருக்கிறோம். ஆயுதக் குவிப்பு குறைப்பு, போர் மறுப்பு ஒப்பந்தம், காஷ்மீர் பிரச்னை, அணுகுண்டு தயாரிப்பு போன்ற பிரச்னைகள் பின்னால் வரட்டும். சந்திப்போம். முதலில் இருநாட்டுத் தலைவர்கள், மக்களிடையே நல்லிணக்கம் ஏற்பட வேண்டும். ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. அந்த அளவில் அயல்நாட்டுக் காரியதரிசி பண்டாரியின் பாகிஸ்தான் விஜயமும் பேச்சுவார்த்தைகளும் பெரும் வெற்றியே!

---

## ஹைக்கூ கவிதைகள்

நாகை மனோகரன்

விருந்தாளிகள்
சென்றனர்:
தெருமுனையில்
ஈட்டிக்காரன்

சன்னலில்
அல்லிகள்
நித்தமும்
அமாவாசை

அடுப்பில்
பானை:
நெஞ்சில்
உலை.

செப்புக்குடம்
வட்டிக்கடையில்
சின்ன பாத்திரம்
அடுப்பின் மீது

உத்திரத்தில்
சேலை
உடம்பில்
காதல் தோல்வி

# கருணாநிதி முதல்வராக

* வலங்கை ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? இலங்கைப் பிரச்னைக்கு முடிவு காண தென் மாநில முதல்வர்களின் கூட்டத்தைக் கூட்ட வேண்டும் என்று ஹெக்டே கூறியிருப்பது பற்றி?

! ஈழத்தமிழர் பிரச்சினை ஏதோ இலங்கைக்கும் தமிழ்நாட்டுக்கும் இடையேயான தனிப் பிரச்னை அல்ல. இந்தியாவின் மற்ற மாநிலத்தவரும் கவலை கொள்கிறார்கள் என்று காண்பிக்க உதவும். அதற்குமேல் பிரச்னைக்குத் தீர்வு காண உதவுமா? அதற்குப் பாரதப் பிரதமர்தான் சுறுசுறுப்படைய வேண்டும்.



* யோசனை!  * முதல்வராக...?

* எஸ். வில்சன், நாகர்கோயில் *

? சிவாஜி கணேசன், சுனில்தத், அமிதாப் பச்சன் போன்றவர்களை அருகில் வைத்துக் கொண்டு கறுப்புப் பணத்தை ஒழிப்பேன் என்கிறாரே ராஜீவ் அவரால் முடியுமா?

! கறுப்புப் பணம் சினிமா நட்சத்திரங்களிடம் மட்டுமில்லை. அரசியல்வாதிகள், வர்த்தகர்கள், தொழிலதிபர்கள், டாக்டர்கள், இன்ஜினியர்கள், வக்கீல்கள் போன்ற பலப்பலரிடம் உள்ளது. பணக்காரர் என்றால் கறுப்புப் பணத் திருவிளையாடல் இல்லாமல் முடியாது என்ற நிலைக்கு இன்று அரசின் தவறான கொள்கைகள் கொண்டு வந்து வைத்துவிட்டது. இதைமிக எளிதாக நிவர்த்தி செய்யலாம். செய்யாததற்குக் காரணம் கறுப்புப் பணப் பொருளாதாரம் முக்கியப்பட்ட பலபேருக்குப் பலவிதங்களில் ரொம்ப ரொம்ப வசதியாக இருப்பதுதான்.

* நாகை ஜி. அஹ்மது.

? வீடியோ படங்கள், டி.வி.யிலேயே 3-D படங்கள் என்று விஞ்ஞானம் போகும் போக்கைப் பார்த்தால் இப்போதைய திரை உலகம் எத்தனை காலம் தாக்குப் பிடிக்கும்?

! மேல்நாட்டு அனுபவத்தை வைத்துப் பார்த்தால் வெள்ளித் திரையைச் சுருட்ட வேண்டியதுதான். டி. வி. பிரபலமான பிறகு, அங்கே வார, மாதப் பத்திரிகைகள் பல மடிந்தன. திரை அரங்குகள் சூதாட்ட நிலையங்களாய் மாறின. ஹாலிவுட் விழித்துக் கொண்டு சினிமாஸ்கோப் என்றபோது டி.வி.யிலும் அகலத்திரை வந்தது. சினிமாவில் 3-D என்றால் டி.வி.யிலும் 3-D. ஆக, இப்படிப் போட்டி போட முடியாது என உணர்ந்து டி. வி. காரர்களால் எடுக்க முடியாத விதமாக நூதனக் கதை அமைப்பு, காமிரா கோண உத்திகளைக் கையாண்டு திரை உலகு வெற்றி பெற்றது. உம்; **Mad Max; Star Wars** போன்றவை. இங்கேயோ டி. வி. சாதனம் அரசு இலாக்காவின் ஓர் அங்கமாக இருக்கும் வரை அவர்களால் சினிமாவுடன் போட்டி போட இயலாது. மாறாக, சினிமாவின் தயவால் டி.வி. வாழ்கிற நிலைதான் நீடிக்கும் — போதாக்குறைக்கு ஹிந்தி ஆதிக்கமும் டி.வி.யில் அதிகரித்துக் கொண்டு போனால் தமிழ் மற்றும் பிராந்திய மொழி சினிமாத் தயாரிப்பாளருக்கு என்ன கவலை?

* கவி கண்ணன், போடிநாயக்கனூர்.

? கருணாநிதி மீண்டும் முதல்வராக என்ன செய்ய வேண்டும்?

! அவரும் அவர் கட்சியும் அடுத்த தேர்தலில் வெற்றிபெற வேண்டும்.

* எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்.

? டைரக்டர்கள் மணிவண்ணன், சுந்தரராஜன் ஒப்பிடுக....

* இங்கும் ஆட்ரி ஹெப்பர்ன்



! முன்னவருக்குப்படத்தில்இன்லிடெண்ட் முத்துக்கள் ஜொலிக்கா விட்டாலும் முழுப் படமெனும் நெக்லஸ் ஜொலிக்கும். பின்னவருக்கு முத்துக்கள் தனித்தனியே பிரகாசிக்கும் அளவுக்கு நெக்லஸ் ஜொலிப்பதில்லை. இருந்தாலும் கூட மணிவண்ணனை ஒரு நூறாவது நாள் வந்த பிறகுதான் நினைவில் வைத்துக்கொள்ள முடிந்தது. சுந்தரராஜனை பயணங்கள் முடிவதில்லையிலேயே தம் பெயரைப் பசுமரத்தில் ஆணியால் எழுதிவிட்டார்.



* சரியான விமர்சனம்.

* பிடித்த கவிதை.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.
? தஞ்சாவூர் பொம்மையைக் கொண்டு வந்து எம். ஜி. ஆர். பெயரால் வோட்டுக் கேட்டால் கூடக் கிடைக்கும் என்று ஆர். எம். வீ. கூறுகிறாரே?

* ரகுமான்கான், சென்னை.
? பாலசந்தரின் லேட்டஸ்ட்? எனி நியூஸ்?

! நிறைய. ஏனென்றால் பார்த்துவிட்டேன், கல்யாண அகதிகளை! ஜெயமன்மதனின் விமர்சனத்துக்கு முன்னால் ஒரு டிரெய்லர் விமர்சனம்: நாகரீகத்தில் எவ்வளவோ முன்னேறிவிட்டதாகச் சொல்லிக் கொள்கிறோம். ஆனால் பெண் இனத்தின் துயர் அப்படியே தான் இருக்கிறது. சமத்துவம் சொல்லில் தான், செயலில் இல்லை. இந்த அடிப்படையான ஆழ்ந்த சோக சப்ஜெக்டை நகைச் சுவைப் பூச்சுக் கொடுத்து எடுத்திருக்கிறார். அந்த நகைச்சுவை காரணமாகவே சோகம் இன்றும் அழுத்தமாக நம் மனங்களை ஆக்ரமிக்கிறது. இப்படி ஒரு **tragicomedy** தமிழில் எடுக்கப்படுவது இதுவே முதல் தடவை — நான் அறிந்தவரை. அந்த வகையிலும் பாலசந்தர் முன்னோடியாகிறார். மைஃபேர்லேடி, ரோமன் ஹாலிடே போன்ற ஆங்கிலப் படங்களைப் பார்த்து ஆட்ரி ஹெப்பர்னுக்கு இணையாக உலக அரங்கிலே யாருமில்லை என்று எண்ணி வந்த என்னை 'இதோ சரிதா இருக்கிறாரே' என்று நினைக்கச் செய்துவிட்டார் டைரக்டர். எனக்கு மட்டும் சக்தி இருந்தால் அகாதமி அவார்ட், ஆஸ்கார் அவார்ட் போன்றவை தருவோரை காதைப் பிடித்து இழுத்து வந்து உட்கார்த்திச் சரிதாவின் நடிப்பைக் காணச் செய்வேன்.

# என்ன செய்ய வேண்டும்?

! தாம் உட்பட தமது கட்சியின் எம். எல். ஏக்களையும், எம்பிக்களையும் தலையாட்டிப் பொம்மைகள் என்று சரியாக விமர்சித்த மட்டில் மகிழ்ச்சி.

* வி. சந்திரசேகரன், மதுரை.
? தங்களுக்குப் பிடித்த இன்குலாப் கவிதை?

ஸாம்பின் இதோ:
இடைத் தேர்தல் உட்பட
எல்லாத் தேர்தல் மேடைகளிலும்
தலைவர் முதலாகத்
தொண்டர் ஈறாகத்
தத்தம்
தொண்டையில் கட்டி வைத்த
வெறி நாய்களை அவிழ்க்க,"
அவை—
வாக்குறுதிக் குரைப்புகளால்
காற்றைக் காயப்படுத்துகின்றன!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
எஸ். வில்சன்,
முத்தையா ஆசான் காம்பவுண்ட்,
சி. பி. எச். ஆஸ்பத்திரி சமீபம்,
நாகர் கோயில்—629001.

**நீங்கள் கேட்டவை**
**தராசு**



# வெள்ளித்திரை



ஒரு கிராமம். அப்பாவி மக்கள். அவர்களுக்கு வேலை தருவதாகச் சொல்லி அழைத்துச் சென்று கொத்தடிமைகளாக்கும் ஒரு கூட்டம். அதன் தலைவனாய் திரை நிறைந்த வினு சக்ரவர்த்தி. அப்பாவிகளில் ரோஷமும் வீரமும் பொங்க எதிர்க்கும் தியாகராஜன். ஒரு பெரிய மைதானம். நட்டு வைத்த பாதி மரங்கள் நிறைய. ஊடே உயிரை வாங்கத் தயாராய் கூர் ஈட்டிகள். அந்த மரங்களின் மேலே நின்று சண்டை போட்டு (அடிமைப் பெண் நினைவிற்கு வரவில்லை?) என் ஆளை எவன் ஜெயிக்கறானோ அவனுக்கு விடுதலை என்கிறான் தலைவன். தியாகராஜன் இறங்குகிறார். ஆரம்பமே ஊறுகாய்க் காரம்.

என்ன ஆக்ரோஷமான சண்டை! இங்கே மட்டுமல்ல. பின்னால் வரும் ஸ்டண்ட் காட்சிகளிலும் தூள் கிளப்புகிறது. ஸ்டண்ட் மாஸ்டருக்கு ஒரு மாலை!

வில்லனின் ஆளை ஜெயித்த பின்னால் நியாயமான விடுதலை கிடைக்காமல் அநியாயமாய் தியாகராஜன் சாகடிக்கப் படும் போது, அவர் உடம்பையாவது எனக்குக் கொடுங்கள் என்று சத்யகலா கதறும் போது, அப்பாவை விட்டுடுங்க, விட்டுடுங்க என்று கதறும் பையன்கள் தரதரவென்று இழுத்துத் தள்ளப்படும் போது ஆழமான கவிதை. முடிந்ததும் பெயர் காட்டி இருபது வருஷத்தைப் பின் தள்ளியவுடன் — புஸ்ஸ்டமால்! — கதை பங்சர்.

அண்ணன் தாடி தியாகராஜன். தம்பி தாடியில்லா தியாகராஜன். அண்ணனுக்கு மனைவி சரிதா. தம்பிக்கு காதலி, சுலக்ஷணா. சுலக்ஷணா ஒரு காலத்தில் நல்ல துறுதுறு. இப்போது? சரிதா — 'கனமான' ரோல் தான்! வில்லன்களைப் பழி வாங்கும் நினைவோடே வாழும் கணவன் என்றைக்கு வேண்டுமானாலும் அவன் தாலியைப் பறிக்கக் கூடும் என்ற பயம். கடவுளுக்கு ஒரு விநோத வேண்டுதல். கட்டிய பொன் தாலியைக் கழற்றி உண்டியலில் போட்டு விட்டு வருஷா வருஷம் கல்யாண நாள் அன்றைக்குப் புதுத் தாலியைக் கணவன் கையால் கட்டிக் கொள்வது. சரிதா கொஞ்சம் ஆழமாய்ச் செய்திருப்பதால் காட்சி அழுத்தமாய் இருக்கிறது.

''சங்கர் தாதா'' என்று ஏழை எளிய மக்களால், நியாயம் தேடும் கனவான்களால் அப்போது அழைக்கப்படும் அண்ணன், ''தாதா'' வான கதையில் அவர் மீது கோபம் தான் வருகிறது. சத்யராஜும், நளினிகாந்தும் தியாகராஜனிடம் 'லெஃப்ட் அண்ட் ரைட்'' வாங்குவதற்காகவே சேர்க்கப்பட்டவர்கள். அதுவும் 'சங்கர் தாத்தா'வைப் பார்க்க ஆறு மாதங்கள் காத்திருந்து தொடர்ந்து முயற்சி செய்து 'அப்பாயின்ட்மெண்ட்'' வாங்கும் இடம் சரியான கப்ஸா. கிளைமாக்ஸில் தியாக அண்ணன் அநாவசியமாய் போய் அடிபட்டுச் சாகும் போது 'ஐயோ பாவம்' என்பதை விட 'முட்டாளே அனுபவி!' என்றுதான் நிறைய வாய்கள் முணுமுணுக்கும்.

டைரக்டர் கோபி ரொம்ப உழைத்திருக்கிறார். இசை எம். எஸ். வி. பிழைத்திருக்கிறார். காமிராவை கையாண்ட கஜேந்திர மணி அழகை இழைத்திருக்கிறார்.

கையில் பாப்கார்னும், மிளகாய் பஜ்ஜியுமாய் அலையும் அவசரக் கார்ர்களுக்கு சுவாரஸ்யமான இரண்டரை மணி நேரம்

—ஜெயமன்மதன்

# மீண்டும் பராசக்தி

தயாரிப்பாள நண்பர்களிடம் ஒரு பாவலான செண்டிமெண்ட் போதும். வெகு பழைய வெற்றிப் படத் தலைப்புகளை மறுபடியும் பெயர் சூட்டு விழா செய்து தங்கள் படங்களின் வெற்றிக்கு இட்டுச் செல்லலாம் என்று. கதை கதை என்று ஒன்றை சொல்வார்களே. அது ஆஸ்பத்திரி கேஸாய்ப் படுத்திருக்கும் போது தலைப்பு என்ன செய்யும்?

ஜெய்சங்கரிடமிருந்து அவர் மனைவியையும், மகளையும் பிரித்து விட்டார் என்பதற்காக செந்தாமரையை அவர் பழி வாங்க நினைப்பது சரிதான். அதற்கு ஆண்பிள்ளைத் தனமான முயற்சிகள் செய்ய மாட்டாரோ? 'நீங்கள் என் அப்பாவாய் வந்து நடித்து எனக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும்' என்று நளினி சொன்னவுடன், பலானப்பட்ட மாப்பிள்ளை செந்தாமரையின் மகள் என்று அறிந்து உடனே சம்மதிக்கிறாராம். மாறு வேஷத்தில் (யாரய்யா அது மேக்கப் மேன்? விரல் நீளத்திற்கு முகவாய்க் கட்டையில் தாடி பொருத்தி விட்டால் அடையாளம் தெரியாமல் போய் விடுமா?) வந்து முன் நின்று கல்யாணத்தை நடத்துகிறாராம். முதலிரவுக்குப் போகும் பெண்ணை நிறுத்திக் கைகேயி வரம் மாதிரி, 'நீ உன் புருஷனை உன் கையால் கொல்ல வேண்டும்' என்று மிரட்டுகிறாராம். பணயமாய் அவளுடைய அம்மாவைப் பிடித்து வைத்துக் கொள்கிறாராம். (அந்த அம்மா அவர் பொறுப்பில் சிறைப்படும் போதும் சரி, கடைசியாய் விடுதலையாகும் போதும் சரி, அவர் யார் என்ன என்று திரும்பிக் கூடப் பார்க்கவும் மாட்டாராம்). கையில் துப்பாக்கியோடு கண்காணிக்கிறாராம்.

நளினி பாவம் மெனக்கெட்டு நடித்திருக்கிறார். வளையல்களை அடுக்கி பின் உடைத்து, பந்து பந்தாய் பூ வைத்து பின் உருவி, பெரிதாய் பொட்டிட்டு பின் அழித்து என்று மூடச் சடங்குகள் அவருக்கு நடத்தப்படும் போது முட்டிக் கொண்டு வரும் அழுகையும், கேவல்களும் முக உணர்ச்சிகளும் சரியான விகிதத்தில் அவரால் கையாளப்பட, அந்தக் காட்சியின் சோகம் நம்மையும் பிடிக்கிறது.

சிவ—புஸ்—குமார் அலட்டிக் கொள்ளவே இல்லை.

ஆக்ஸிடெண்ட் ஆகி நிற்கும் காரில் ஒரு பிணம் ஸ்டீயரிங்கில் கவிழ்ந்திருக்க, கிட்டே நெருங்காமல், எதையும் ஆராய்ச்சி செய்யாமல் பத்தடி தள்ளி நின்றே அது யார் பிணம் என்று தீர்மானிக்கும் அளவிற்குத் தமிழக போலீஸை முட்டாளாய்க் காட்டியிருக்க வேண்டாம்.

சிவகுமார் இறக்கவில்லை என்று நாம் நினைத்திருக்க அவர் உடலை போஸ்ட் மார்ட்டத்திற்கு எடுத்துச் செல்வதும், புதைக்கப் போன இடத்தில் எரிக்கச் சொல்வதும் விறுவிறுவென்று சுவாரஸ்யமான கட்டங்கள். அவை மட்டுமே சுவாரஸ்யமான கட்டங்கள்.

சினிமாவில் லாஜிக் தேடுவது தப்புதான். என்றாலும் இப்படியா?

இளையராஜா கூட ஏமாற்றுகிறார்.
கணேச பாண்டியனின் காமிரா அட்டகாசம்.
கவுண்டமணி — மனோரமா வழக்கமான கூத்து.
பெயரைப் பார்த்து ஏமாற வேண்டாம்

**ஜெயமன்மதன்**




வல்லவனுக்கு வல்லவன் விருது
பெற்ற கிரிக்கெட் வீரர் யார்?
உலகத்திலேயே முதன் முதலாக
விண்வெளி சென்ற பெண்மணி யார்?
General Knowledge
General Knowledge

# பாரதிதான் நினைக்கணுமா?

கேள்வி (4): தங்களுடைய படங்களில், கதாநாயகியை மற்ற கதாபாத்திரங்களை விடப் புத்திசாலியாக உருவாக்குகிறீர்களே! அதற்குத் தனிப்பட்ட காரணம் ஏதாவது உண்டா? (பாரதியின் புதுமைப் பெண்ணைக் கொண்டு வருகிறேன் என்கிற பதில் வேண்டாம், ப்ளீஸ்!) (செல்வி ரஜினி, விருத்தாசலம்)

கே. பாலசந்தர்: தேங்க் யூ மிஸ் ரஜினி. என் படங்களில் பிச்சைக்காரன் பாத்திரம் கூடப் புத்திசாலித்தனமா இருக்குங்கறது தான் என் மீது உள்ள உண்மையான குற்றச்சாட்டு. கதாநாயகனை உடல் ரீதியிலும், மன ரீதியிலும், வலுவுள்ளவனாக, புத்திசாலியாய் அமைக்கறது போலவே கதாநாயகியையும் அமைக்கறதிலே தப்பில்லே. 'முட்டாள்' பாத்திரம்னு சொல்லிட்டு கிதை, ஷேக்ஸ்பியர்லேயிருந்து எடுத்துக் காட்டி பேசினால் தான் முரண்பாடு. பெண்களும் புத்திசாலிகளாய் இருக்கணும்கறது என் ஆசை. அவ்வாறு ஏராளமானவர் இருக்கவும் செய்கிறார்கள். பாரதியார் தான் பெண்கள் புத்திசாலித்தனமாய் இருக்கணும்னு நினைக்கணும்கிறது இல்லே; இந்த பாலசந்தரும் நினைக்கலாம். (பாரதியின் புதுமைப் பெண்ணைப் பற்றி நான் குறிப்பிடவில்லை. கவனிக்கவும்).

கேள்வி (5): தப்புத் தாளங்கள் படத்தில் தாங்கள் படைத்த 'பிம்ப்' பாத்திரத்தின் தத்ரூபத்தை, 'இதையெல்லாம் எங்கே, எப்போது இவர் கண்டு தெரிந்து கொண்டார்?' என்று தங்கள் மனைவி வியந்ததை ஒரு பேட்டிக் கட்டுரையில் படித்ததாய் ஞாபகம். மனித வாழ்க்கையில் ஒளிந்து கிடக்கும் இது போன்ற ரகசியங்களைத் துப்பறிந்து கண்டு பிடித்து எங்களை வியக்க வைக்கிற தங்கள் டைரக்ஷன் திறமையின் ரகசியத்தை நாங்கள் தெரிந்து கொள்ளலாமா? (கே. ஜெயப்பிரகாஷ், தும்பா.)



கே. பாலசந்தர்: அன்னிக்கு என் மனைவி கேட்ட சில கேள்விகளை இன்னிக்கு நீங்க கேட்டிருக்கீங்க. சந்தோஷம். சுருக்கமாச் சொன்னா, 'தப்புத் தாளங்கள்' ஒரு விலை மாதுவைப் பத்தின படமாச்சே! எப்படி இவ்வளவு தத்ரூபமா எடுத்திருக்கீங்க? என்பது கேள்வி. இதுக்குப் பதில் இதுதான்: ஒரு விலை மாதுவைப் பற்றி, சகலமும் தெரிஞ்சவங்க — நான் சொல்லறது புரியும்னு நினைக்கிறேன் — எல்லாராலேயும் தப்புத் தாளங்கள் படம் எடுத்துட முடியாது! (பலத்த சிரிப்பு) ஆகவே, ஏதோ ஒரு விஷயத்தை நாம் சொல்லணும்னு நினைக்கும் போது அது சம்பந்தமா எல்லா விஷயங்களையும் ஆதார பூர்வமா தெரிஞ்சுக்கறதுதான் கிரியேடிவிடிக்கு ஃபவுண்டேஷன். எதையும் தெரிஞ்சுக்கணும்கிற ஆர்வம், தெரிஞ்சுக்கிட்டதைத் தெளிவா, அழுத்தம் திருத்தமா சொல்லணும்கிற வெறி, சொல்ல வேண்டிய விஷயம் பற்றி எந்தக் குழப்பமும் இல்லாமல் க்ளியராய் இருப்பது, ஏற்றுக் கொள்வார்களா மாட்டார்களா என்பது ஒரு புறம் இருக்க, இதைத்தான் சொல்லப் போகிறோம் என்கிற தீர்மானமான முடிவு — என்னைக் கேட்டா இவையே வெற்றிக்குக் காரணமா இருக்கலாம்.

கேள்வி (6): இப்போதெல்லாம் டைரக்டர்கள் தங்கள் படங்களில் நடிப்பது போல, நீங்களும் உங்கள் படத்தில் ஒரு வேடத்தில் அட்லீஸ்ட் கௌரவ வேடத்தில் — ஏன் சார் நடிக்கக் கூடாது? (பிரியா ஜெயசீலன், சென்னை–3.)

கே. பாலசந்தர்: ஒரு படத்தின் டைரக்டர் அவரோட படத்துலே நடிக்கிறதை கொள்கை ரீதியில் நான் ஒத்துக்கறதில்லே. ஒரு சிலர் தங்கள் சாமர்த்தியம், புத்திசாலித்தனம் இவற்றால் இரண்டையும் வெற்றிகரமாய்ச் செய்ய முடிகிறது என்பது வேறு விஷயம். நானும் முதலில் மேடைலே பல நாடகங்களில் நடிச்சிருக்கேன். நாடகங்களை எழுதி இயக்க ஆரம்பிச்சதும் மெல்ல மெல்ல நடிக்கறதை நிறுத்தி விட்டேன். இதற்குக் காரணம் பல. எடிட்டிங் டேபிளில் போய் உட்காருகிற போது, நடிகர் என்கிற இன்ஸ்டிங்டும், டைரக்டர் என்கிற இன்ஸ்டிங்டும் மோதக் கூடாது. டைரக்டர் தனியா இருக்கணும். சொல்லப் போனா ரைட்டர், டைரக்டர் இந்த இரண்டு இன்ஸ்டிங்டும் அடிக்கடி மோதும். அப்ப கூட டைரக்டர் தான் சுப்ரீமா இருக்கணும். இந்த மாதிரி சில கட்டுபாடுகளை வைச்சிக்கிட்டிருக்கிறதுனாலேதான் சந்தர்ப்பங்கள் எத்தனையோ வந்த போது கூட நான் நடிப்பதைத் தவிர்த்துக் கிட்டே வந்திருக்கிறேன்.

# நேரம் நல்ல நேரம்

## கே. பாலசந்தர்

# பாலசந்தரும் நினைக்கலாம்!

என்ன வேணும்னு, ஒரு ஈடுபாடு... மனத் தோட சேர்ந்து முகமும் இன்டர் ஆக்ட் பண்ணனும். அதை அவர்கள் அறியாம லேயே என்னால் புரிந்து கொள்ள முடியும். அவர்களுக்கு ஒரு சான்ஸ் கொடுத்து உப யோகப்படுத்திப்பேன்.



கேள்வி (7): தங்களுக்குத் தொல்லை தராத, தாங்கள் அறிமுகப்படுத்திய நடிக, நடிகையார்? (பாரபட்சமின்றி பதில் தரவும்). (கோ. மீனவன், காட்பாடி)

கே. பாலசந்தர்: பாரபட்சமில்லாம பதில் சொல்லறேன். எனக்கு பயமில்லே. எல்லோருமே தான். அறிமுகப்படுத்தினவன் இறதுனலேயே எனக்குத் தொல்லை கருவாங்களா? நீங்களே நினைச்சுப் பாருங்க. நிச்சயம் தொல்லை தர மாட்டாங்க.

கேள்வி (8): இயக்குனர் இமயமே! தாங்கள் ஏன் நடிப்பின் இமயமான சிவாஜியை வைத்து ஒரு படம் கூட எடுக்கவில்லை? (ஏ. முருகேசன், திருச்சி—6).

கே. பாலசந்தர்: ஏன் ஒரே ஒரு படமெடுத் திருக்கேனே, நடிகர் திலகத்தை வைச்சு! பேர் "எதிரொலி". அதுக்குப் பிறகு அவரைப் போட்டு எடுக்கக் கூடிய வாய்ப்பு எனக்குக் கிடைக்கவே இல்லே. ப்ராபப்ளி ஐ'ம் அன் ஃபார்ச்சுனேட்!

கேள்வி (9): நீங்கள் எந்தத் தகுதியை அடிப்படை யாய் வைத்து நடிகரை செலக்ட் செய்கிறீர்கள் என்று சொன்னால், நடிப்பில் ஆர்வமுள்ள என் மகனை உங்களிடம் அனுப்ப வசதியாய் இருக்கும்! (திருமதி பானு, சென்னை—23).

கே. பாலசந்தர்: அடுத்த நிமிடமே உங்க மகனை என் வீட்டுக்கு அனுப்பி வெச்சுரு வீங்க என்கிற ஒரே காரணத்துக்காகவே இந்தக் கேள்விக்குச் சரியான பதில் சொல்லக்கூடாது. ஆனாலும் இது பொதுப்படை யான கேள்வி. லோ, பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கேன். நடிக, நடிகையரை தேர்ந்தெடுக்கக் குறிப்பிட்ட ஃபார்முலாவே கிடையாது. நல்லா பாஷை பேசணும்கிறது கிடையாது. பின்னாலெ கூட கத்துக்கலாம். நல்ல முக வெட்டும் அவசியமில்லே. ஏன்னா, நல்ல முகவெட்டு இல்லாதவங்களெல்லாம் அதைச் சரிகட்டற மாதிரி ரொம்பத் திற மையா நடிக்கிறாங்க. ஆனா முக்கியமா

கேள்வி (10): புரட்சிகரமான கருத்துள்ள படங்கள் மக்களால் வரவேற்கப்பட்டாலும் அது சமுதாயத்தில் எந்த வித பாதிப்பையும் ஏற்படுத்தாமல் போய் விடுவது ஏன்? (ஏ. சுகுமார், காஞ்சிபுரம்).

கே. பாலசந்தர்: சினிமா ஒரு சக்தி வாய்ந்த மீடியம்னு சொல்றாங்க. ஆனாலும் உங்க கேள்வி எங்க திறமையின்மைக்கு மிகப் பெரிய சர்டிபிகேட்! ஏதோ ஒரு படத்தைப் பார்த்துட்டு அதுலே வர மாதிரி கொலை செஞ்சாங்கிற குற்றச்சாட்டை நீங்க ஒத்துக் கலே என்கிற விஷயத்தில் நான் சந்தோஷப் படறேன்! அல்லது ஒரு வேளை கெட்ட விஷ யங்களைச் சொன்னா அதை மட்டும் பிடிச்சுக் கிட்டு, நல்ல விஷயங்களைக் கடை பிடிக்க மாட்டேங்கறாங்களோ என்னவோ? "புன்னகை"லே உண்மையே பேசுகிற காரெக்டரைச் சொல்லியிருக்கேன். அது பாதிப்பை ஏற்படுத்தலேன்னா, பொதுப்படையாச் சொன்னா, அதுதான் மனிதகுபாவமோ?

தொகுப்பு: மௌனஷ்மி.

போட்டோ உதவி: பிலிம் நியூஸ் ஆனந்தன்

புன்னகை



# வட்டமேஜை

* 'புகை பிடித்தல் குறைந்து கொண்டே வருகிறது' என்ற தலைப்பின் கீழ் பிரசுரமான செய்தியை படித்து என்னைப் போன்ற மாணவர்கள் புகை பிடிக்கும் பழக்கத்தைச் சிறிது சிறிதாக குறைக்க தீர்மானம் செய்துள்ளோம். (அதாவது **No Smoking Day** மாதிரி). இதை எழுதியவர்க்கு எனது மனமார்ந்த நன்றி.

நாகர்கோவில். இ. முத்துகுமாரசாமி.

* இருபத்திரண்டு வருட திரையுலக அநுபவமும் இரு நூறு படங்களும் கொண்ட கே. ஆர். வி.யின் பேட்டி வித்தியாசமாய் இருந்தது. அவர் அளித்த பதில்கள் அவர் ஒரு நிறை குடம் என்பதை நிரூபிக்கிறது.

சென்னை—59. ராமாபுரம் சந்துரு.

* 'முதுகில் குத்தாதீர்கள்' தலையங்கத்தின் கருத்துக்கள் நியாயமானவை. அவர்களின் போராட்டம் ஓர் ஆரம்பம். மற்றப் பகுதி திறமை மிக்க இளைஞர் குமுறிக் கொண்டிருக்கின்றனர். இதை பிரதமரும் மற்றவர்களும் உணர்ந்து செயல்பட வேண்டும்.

சென்னை—5. எஸ். சம்பத்குமார்.

* இந்தியப் பிரச்னையை தனது விஷயதானத்தின் மையக் கருவாக எடுத்துக் கொண்ட வாஸந்தி பாராட்டுக்குரியவர்.

சென்னை—11. பானுமதி மனோகர்.

* வருமானவரியை அடியோடு அரசு ஒழித்து விட வேண்டும். காரணம் கேளுங்கள். நமது தேசத்தில் ஐந்து லட்சம் கோடி ரூபாய் கறுப்புப் பணம் இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது! வருமான வரி இல்லை என்றதும் இது பகிரங்கமாக தொழில்களில் முதலீடாகும். வேலை இல்லாத் திண்டாட்டம் ஒழியும். நாட்டின் தொழில்—பொருளாதார வளம் பெருகும். இதனால் அரசுக்கு எக்ஸைஸ் முதலிய வரிகள் மூலம் ஆண்டொன்றுக்கு 50,000 கோடி அதிகப்படி வருவாய் கிடைக்கும் (10 சதம்). ஆனால் வருமானவரி ஒழிப்பினால் அரசுக்கு ஏற்படும் இழப்பு ஆண்டொன்றுக்கு 3000 கோடி மட்டுமே!

பம்பாய். மோகன் ஜி. அத்வானி.

* 4.11.84 கல்கி இதழில் "'அம்மா' பணத்தை வாரி வழங்குவோரே. அப்பா பணத்தைத் தருவீரா?" என்ற தலைப்பில் எனது ஒரு கடிதம் பிரசுரமாகியிருந்தது. அதைப் படித்து விட்டு ஐ. ஓ. பி. யின் கோவை பிராந்தியக் கேந்திரம் உடனே தக்க நடவடிக்கை எடுத்தது என்பதைக் கூற கடமைப்பட்டுள்ளேன். காலம் சென்ற என் தகப்பனாரின் பணம் என் கைக்கு வந்து சேர்ந்து விட்டது. தங்களுக்கும், ஐ. ஓ. பி. க்கும் நன்றி.

கோவை. எஸ். எஸ். ஹரிஹரன்.

* போலீஸ் வேலைக்காகச் சென்ற பல்லாயிரக்கணக்கான இளைஞர்களைக் கட்டுப்படுத்த போலீஸ் தடியடி நடத்தியதில் நெரிசலில் சிக்கி நசுங்கி ஒரு இளைஞன் சாவு; ஐம்பது பேருக்கு மேல் காயம்! வேலையில்லா திண்டாட்டம் என்ற பேய் இளைஞர்களை எப்படி எல்லாம் ஆட்டி வைக்கிறது என்பதற்கு அரசாங்கத்திற்கு ஒரு நல்ல எடுத்துக் காட்டு இது. அரசு விழித்துக் கொள்ளுமா? மற்றொன்று, கூட்டத்தை எங்கும் கட்டுப்படுத்தி வைக்க வேண்டிய போலீஸ் இலாகா தன் விஷயத்திலேயே போதிய முன் ஜாக்கிரதை காட்டாதது வெட்கக்கேடு.

எண்ணூர். ஆர். சாய்சங்கர்.

* விருந்து வைப்போம்! தொழில் வளர்ப்போம்!' என்ற ஆசிரியரின் கட்டுரை நினைக்கும் போதெல்லாம் சிரிப்பை வரவழைக்கும் நயமான **SATIRE!**

போடிநாயக்கனூர். எஸ். சையது முகமது.

* கல்கியில் ஜெயகாந்தன் எழுதிய மினி தொடர் கதையான 'புதிதாய்ப் பிறந்தாள்' கதை எழுத்திலும் நடையிலும் மட்டுமல்லாது கருத்திலும் பண்பு காத்திருக்கும் மாண்பு என்னை மிகவும் கவர்ந்திருக்கிறது. பெண்களுக்கே உரிய நுட்ப உணர்வை வெளிப்படுத்துவதில் அவருக்கு நிகர் அவரே. ம. செ. யின் சித்திரங்கள் அற்புதம்.

கோவில்பட்டி. திருமதி சந்திரிகா.

* நாவல் உலகுக்கு ஒரு நட்சத்திர எழுத்தாளரை அறிமுகப்படுத்தியிருக்கிறீர்கள். ஜெயகாந்தனின் 'புதிதாய்ப் பிறந்தாள்' சிறியதாய் இருந்தாலும் மிகச் சிறப்பாய் இருந்தது.

சென்னை—1. ஆர். சாவித்திரி.

* இருபத்தி நான்கு வாரங்களாக எங்களை ஏழு நாடுகளுக்கு அழைத்துச் சென்று, பல அபூர்வங்களை மனத்தில் பதிய வைத்துவிட்டார் திரு. நா. பா.

மணப்பாறை—6. உ. அசோக் பாபு.

* வங்கிகளின் வங்கி — கட்டுரை பல விஷயங்களைக் குறிப்பாக — கிழிந்த நோட்டுக்களை மாற்றும் முறையைக் கூறியிருப்பது பயனுள்ள விஷயம்.

தோழுந்தூர். சி. சுப்பு.

* நா. பா. வின் மூலம் ஏழு நாடுகளுக்கு, இன்ப சுற்றுலா சென்று வந்த மன நிறைவை ஏற்படுத்தியமைக்கு நன்றி.

ஈரோடு—1. ஸ்ரீ ரேவதி ப்ரியன்.

* ஏப்ரல் முதல் தேதியன்று காலை மதுரையில் உள்ள ஓர் ஆண்கள் கல்லூரியின் மாணவர்கள் "பஸ்—தினம்." கொண்டாடுவதாக அறிவித்து, முன்னால் இருபது முப்பது மாணவர்கள் பாண்ட் வாத்திய இசையுடன் கூத்தாடியவாறு கலர் பொடியை எல்லோர் மீதும் தூவிக் கொண்டு போக, பின்னால் பாண்டியன் போக்குவரத்து கழகத்தின் பஸ் ஒன்று ஊர்ந்து சென்றது. கலர் பொடியிலிருந்து தப்ப ஆபீஸ் போவோரும், கல்லூரி மாணவியரும் அக்கம்பக்க வீடுகளில் ஒளிந்து கொள்ள நேர்ந்தது. அந்த வழியாக வந்த மற்றொரு பேருந்தில் ஜன்னல் ஓரமாகப் பார்க்க அழகாக ஒரு பெண் அமர்ந்திருக்க, மாணவர்கள் "விடாதே" என்று கூச்சலிட இரு மாணவர்கள் வேகமாக வந்து ஒருவன் பொடி தூவ, இன்னொருவன் பெண்ணின் கன்னத்திலேயே பொடியைத் தடவி விட்டுப் போனான்.

மாணவர்களுடைய இந்தப் போக்கைக் கண்டு மிகவும் வேதனையாக இருந்தது. "பஸ்—தினம்" கொண்டாடட்டும்; இத்தகைய கண்ணியமற்ற போக்கு ஏன்?

மதுரை. ஜி. தனலக்ஷ்மி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது).

## வருமான வரியை! ஒழித்துக் கட்டுங்கள்

## வாரம் ஒரு கடிதம்

# உனது பயணம் எதை நோக்கி?

என் இனிய நண்பனே! கடந்த வாரக் கடிதம் உன்னைக் காயப்படுத்தியிருக்கலாம்.

அதனால் உன் மனசின் கரைகளில் ஆத்திர அலைகள் கூட அடித்திருக்கலாம்.

அதற்காக நான் வருத்தம் தெரிவித்தால் நான் பொய்யனாகப் போய்விடுவேன்.

ஊசி போடுகிறவன் மன்னிப்புக் கேட்க மாட்டான்.

என் கோபத்திலிருக்கும் சோகத்தை நீ புரிந்து கொள்ள வேண்டும்.

இன்றைய இளைஞனே! உனது பயணம் எதை நோக்கி என்று உனது பிம்பத்தை நீ கேட்டதுண்டா?

பிறப்பது நம் கையிலில்லை; இறப்பதும் நம் கையிலில்லை; வாழ்வதற்கு மட்டும் நாம் யார் என்ற வறட்டு வேதாந்தத்தின் மீது வாள் வீசு.

மரணம் பொய் என்பது எவ்வளவு பெரிய உண்மையோ — வாழ்வு பொய் என்பதும் அவ்வளவு பெரிய பொய்.

வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும் உண்மையானது.

அந்த நிமிஷங்கள் இலட்சியங்களால் மட்டுமே கௌரவிக்கப்படுகின்றன.

காலம் இறந்து விடுகிறது: ஆனால் அது மனிதனின் செயல்களால் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

இறந்த காலத்தில் கட்டப்பட்டதுதான் தாஜ்மஹால்; ஆனால் அந்த இறந்த காலம் தாஜ்மஹாலின் மேல் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

திருவள்ளுவன் இறந்த காலத்தில் இருந்தவன்தான்; ஆனால் இன்னும் அவன் இறந்து விடவில்லை.

நிகழ்கால பூமியைச் செதுக்கிக் கொடுத்ததே இறந்த காலத்தின் இலட்சியமும் உழைப்பும்தான்.

இலட்சியமில்லாத வாழ்க்கை ஆணியில் தொங்குகிற சட்டை மாதிரி உள்ளீடற்றுத் தள்ளாடுகிறது.

இந்திய இளைஞனே! இன்று உனது இலட்சியமென்ன?

மருத்துவராவது — பொறியியல் வல்லுனராவது — ஆசிரியராவது — எழுத்தாளராவது — ஓவியராவது — தனித்தொழில் தொடங்குவது. இவை போன்ற ஆசைகளுக்கெல்லாம் நீ இலட்சியங்கள் என்று நாமகரணம் சூட்டிக் கொள்ளக் கூடாது.

இவைகளெல்லாம் இலட்சியங்களல்ல; நீ தேர்ந்தெடுக்கும் துறைகள் —

இந்தத் துறையால் நீ வாழ நினைப்பது உன் விருப்பம்.

இந்தத்துறையை நீ வாழவைப்பது உனது இலட்சியம்.

நீ ஈடுபடும் துறையில் உன் பெயர் சொல்லும் முத்திரை என்ன?

குறைந்த பட்சம் உனது இலட்சியம் என்பது அதுதான்.

நம்மில் பலர் ஒரு நாற்காலி கிடைக்கும் வரைக்கும் நியைப் போல் சுறுசுறுப்பாக இருக்கிறார்கள்.

கிடைத்தபிறகோ அந்த நாற்காலியைப் போல் விறைத்துப் போகிறார்கள்.

நம்முடைய அகராதியில் —

ஆசிரியன் என்பவன் கற்பதை நிறுத்தி விட்டவன்.

அரசாங்க ஊழியன் என்பவன் ஒன்றாம் தேதி மட்டும் உறங்காதவன்.

இந்த நிலை மாற வேண்டாமா?

நம்மில் பலருக்கு உத்தியோகந்தான் இலட்சியம் என்பதனால் வருகின்ற ஊனங்கள்-இவை.

இளைஞனே உனது இலட்சியமென்பது வெறும் பதவி மட்டுமல்ல; அதற்கும் மேலே.

இந்திய துணைக்கண்டத்திலிருக்கும் வேலை இல்லாத இளைஞர்களுக்கெல்லாம் இலட்சியத்தோடு இருப்பதுதான் தீர்வு என்று நான் திரித்துச் சொல்ல மாட்டேன்.

அதற்கு தீர்வு காண்பதோடு இலட்சியம் தீர்ந்து விடுவதில்லை என்று சொல்கிறேன்.

எதிரி என்று ஒருவன் இல்லையென்றாலும் எதிரியை ஏற்படுத்திக் கொள் என்றார் மாசேதுங்.

இதுவரைக்கும் இலட்சியம் என்று ஒன்று இல்லாவிட்டாலும் இலட்சியத்தை ஏற்படுத்திக் கொள்.

இப்படிக்கு,

புகைப்படம்:
யோகா.



**கவிஞர் வைரமுத்து**




'என் பாட்டில் என்ன பிழை' என்று கேட்ட இன்குலாப்பிற்குப் பதில் சொல்கிறார் 'முரசொலி' பாண்டியன். 'தனி நபர் தாக்குதல்கள் அதிகமாக உள்ள இந்தக் கவிதையைப் பாடத் திட்டத்திலிருந்து எடுக்க வேண்டும்' என்று முதலில் முரசொலித்தவரே பாண்டியன் தான். இவர் எதிர்த் தாக்குதலில் முத்துலிங்கத்தின் பதிலில் இடம் பெறாத கருத்துக்களை மட்டுமே இங்கு தருகிறோம்.

முரசொலி பாண்டியன்

# "டிம்பக்டூவுக்குப் போயிருந்தாரா இன்குலாப்?"

பீட்டர்ஸ் சாலையில் நடைபாதையில் குடியிருந்த கொத்தனார் மகன் மழையினாலும், குளிரினாலும் விறைத்து இறந்ததைக் கண்டு மனம் குமுறியே கவிதையை எழுதினாராம் இன்குலாப். ராஜன் என்பவனின் சாவினால் விளைந்தது அந்தக் கவிதை என்றால் சிம்சன் போராட்டத்திற்கு ஏன் போகிறார்? 'அமெரிக்காவுக்குப் படுக்கை விரித்த பாரத மாதா' என்று விரசமாக ஏன் எழுதுகிறார்? கலைஞர், இந்திரா, சிவசைலம் என்று தனிப்பட்டவர்களைப் பேர் சொல்லி ஏன் தாக்குகிறார்? சமகால தத்துவங்களைப் பற்றியோ, இலக்கியங்களைப் பற்றியோ இன்குலாப் எழுதலாம்! அது பற்றி எனக்குக் கவலையில்லை. தனி நபர் தாக்குதல்கள் ஏன்? அதுவும் மக்கள் மதிப்பு பெற்ற தலைவர்களை இப்படி தரக் குறைவாகத் தாக்க அனுமதிக்கலாமா? 'கல்கி'க்குத் தந்த பேட்டியில் இந்த விஷயத்தை அடியோடு புறக்கணித்து விட்டு ராஜராஜன் விஷயத்தை மட்டும் எடுத்துக் கொண்டிருக்கிறார்.

உயிருள்ள மனிதர்களுக்குச் சரியான பாதுகாப்பு இல்லை; ஆனால் சிலைக்காக கவலைப்படுகிறார்களாம் அரசியல்வாதிகள். இவர் சொல்லும் கால கட்டத்தில் பதவியில் இருந்தவர் கலைஞர். ஏழைகளுக்கு அவர் செய்யாததா? தொழு நோய் உள்ளவர்களுக்கு மறு வாழ்வுத் திட்டம், கைரிக்ஷா இழுத்தவனுக்கு சைக்கிள் ரிக்ஷா வழங்கியது, விவசாய தொழிலாளர் குடியிருக்கும் மனை அவர்களுக்கே சொந்தம், கண்ணொளி வழங்கும் திட்டம், குடிசை மாற்று வாரியம், போன்றவை யாருடைய சாதனைகள்? இந்தத் திட்டங்களை கலைஞர் செயல்படுத்திய போது இன்குலாப் எங்கிருந்தார்? டிம்பக் டூவுக்குப் போயிருந்தாரா? பழம் பெருமை பேசத்தான் பேசுவோம்! ஆம், நாங்கள் தமிழர்கள். அந்த முறையில் மூதாதையர்கள் பெருமையை நிலை நாட்டிட முயன்றது எந்த விதத்தில் தவறு? ஆனால் நிகழ்கால வேதனைகளை ஒழிப்பதற்கு மேற்கண்ட திட்டங்களைக் கலைஞர் கொண்டு வந்தாரே!

வியத்தகு தஞ்சை கோவிலைக் கட்டியது விஞ்ஞான சாதனை என்று ஒப்புக் கொள்ளாத இன்குலாபைப் பார்த்துக் கேட்கிறேன். காலாட் படை, குதிரைப் படை என்பது போல் கடற்படை என்று ஒன்று தோற்றுவித்தானே, அது விஞ்ஞானம் தோன்றாத அந்த நாளில் பெரிய சாதனை இல்லையா?

தனி நபர்களை விமர்சிக்க உரிமை உண்டு என்பார் இன்குலாப். ஜனநாயக நாட்டில் எதற்கும் உரிமை உண்டு. அவரைக் கவிஞன் என்று கருதுபவன் தலையில் கவிதையைக் கட்டிக் காசாக்கிக் கொள்ளட்டும். அதுபற்றிக் கவலையில்லை. நம்முடைய கேள்வியெல்லாம் பல்கலைக்கழகத்தில் எப்படி அவைகளைப் பாடமாக வைத்தார்கள் என்பதுதான்.

மூளைச் சலவைகளைப் பார்த்துக்கொண்டு மௌனச் சாட்சியாக இருக்க முடியாதாம் — சரி, அரசியல் களத்துக்கு வரட்டுமே. அவரது வாதங்களை நொடிப் பொழுதில் நொறுக்கி எறியத் தயார்.

பேட்டி: இல்லப்பா
படம்: எட்வர்ட்


Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால்? உடன் புதிய பால் கிட்டாத நிலையாகுலோ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்குகளுக்கும் இது ஈடு இணையற்றது.

புதிய மணங்கவரும் பேக்கில்




ASP/SMP/5/84R

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

Registered as a Newspaper in Sri Lanka

# க்ரீம் க்ரஞ்ச் வெளியிடும்







## அந்தரங்கக் கதை

### க்ரீம் க்ரஞ்ச் பிஸ்கட்டுகளை சுவைக்கும் ரகசிய முறை!

1. யாராவது பார்த்து விடப் போகிறார்கள், ஜாக்கிரதை.
2. பாக்கெட்டிலிருந்து ஒன்றை மெதுவாக உருவுங்கள்.
3. அதை இரண்டாகப் பிரியுங்கள்.
4. கிரீமை நக்குங்கள்.
5. கிரீம் தீரும் வரை (4) திரும்பச் செய்யுங்கள்.
6. கரகரப்பான பிஸ்கட்டைக் கடித்துச் சுவையுங்கள்.
7. க்ரீம் துளிகள் எதையும் விட்டு வைக்காதீர்கள்.




வெண்ணெய் கிரீம் ஏலக்காய்

**பேக்மேன்ஸ் க்ரீம் க்ரஞ்ச்**

**கடைசித்துளி வரை உண்மையிலேயே க்ரீம் கொண்ட**

சில விசேஷ நகரங்களில் மட்டுமே கிடைக்கும்